# நித்திலக் கட்டுரைகள்

தமிழ்நெறிக் காவலர்
பேராசிரியர்
மயிலை. சிவமுத்து

மாணவர் மன்ற வெளியீடு
17, இரத்தின முதலி தெரு, சென்னை-1



[விலை ரூ. 2

# நித்திலக் கட்டுரைகள்

மயிலை சிவமுத்து

முதற்பதிப்பு : 1961

## உள்ளுறை

# பதிப்புரை

நித்திலம் என்பது முத்து. தமிழ் நாட்டு முத்து உலகப் புகழ்பெற்றது. கொற்கைத் துறையில் குளித்தெடுத்த முத்துக்கள் உரோமாபுரி அரசியரின் மணி முடிகளில் ஒளி வீசின என்பது வரலாறு.

முத்துக் குளிக்கும் தொழில் தமிழ்நாட்டுப் புகழ் பெற்ற ...ங்களில் ஒன்றாகும். ஆழ்கடலின் அடியிற் சென்று ...ன் முத்துக்களை அள்ளிக் கொணர்வதற்குத் தேர்ந்த ...பவமும் சிறந்த பயிற்சியும் வேண்டும். அங்ஙனம் ...ரிய திறமை பெற்றவர் கடலில் மூழ்கிக் கரை சேர்த்த நித்திலங்கள் கண்ணைக் கவரும் வண்ணமும் திரண்டுருண்ட உருவமும் ஒளியும் தண்மையும் பெற்று விளங்குவதைக் கண்டு நாம் இறும்பூது எய்துகின்றோம்.

தமிழ் நெறிக்காவலர் பேராசிரியர் முதுபெரும் புலவர் **மயிலை. சிவமுத்து** அவர்கள் தம் நீண்டவாழ்வாகிய கடலில் மூழ்கித் தம் இளம்பருவம் என்னும் அடிவாரம் வரை சென்று அநுபவம் என்னும் அரிய நன்முத்துக்களை அடிக்கடி வழங்கி வரும் தலைசிறந்த சான்றோராவர். அவர் தம் பேச்சிலும் எழுத்திலும் எறிகதிர் நித்திலம் அனைய அரிய பல கருத்துக்கள் ஒளி வீசும் சிறப்பை அனைவரும் நன்கு அறிவர். அங்ஙனம் அவர்தம் வாழ்க்கைக் கடலில் குளித்தெடுத்த நன்னித்திலங்களாகிய வண்ணக் கட்டுரைகள் சில இத்தொகுப்பில் வீசித் திகழ்கின்றன.

பேராசிரியர் அவர்கள் உருவத்தால், வயதால், அறிவால், அநுபவத்தால் முதியவராயினும், எண்ணத்தால் எழுச்சியால் என்றும் இளைஞராகவே விளங்கி வருபவர். எழுபதாண்டு கடந்த தம் நீண்டவாழ்வில் சிறந்த தமிழ்ப் புலவர்கள், அறிஞர் பெருமக்கள், அரசியல் தலைவர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள் ஆகிய அனைவரிடமும் பழகிப் பற்பல துறைகளிலும் பண்பட்டவர். தமிழ் இலக்கிய இலக்கணங்கள், சமய நூல்கள், வரலாற்று நூல்கள் இக்காலப் புத்தம் புதிய அறிவு நூல்கள், ஆங்கில நூல்கள் அனைத்தும் கற்றுத் தேர்ந்த பேரறிஞர். முதிய வயதிலும்

தன்னலம் கருதாமல் பொதுநலம் கருதி உழைக்கும் தாளாண்மை மிக்க வேளாளர்.

இங்ஙனம் பேரறிவும் அநுபவமும் வாய்ந்த பெரியார் அவர்கள் பல்வேறு சமயங்களில் தம் பலதுறைப் பேரறிவும் சுடர்விட்டு ஒளிரும்படி எழுதிய அநுபவ நன்முத்துகளாகிய பதினைந்து சிறந்த கட்டுரைகளைக் கருத்துக்கினிய வண்ண மாலையாகத் தொகுத்துத் தமிழன்னைக்குச் சூட்டி மகிழ்கி 1 றோம்.

இக்கட்டுரைகளில் இலக்கியத் திறனாய்வாக அமைந்3 தவை சில. சமய நூல்களின் சாரமாக அமைந்தவை சில. பழமைக்கும் புதுமைக்கும் பாலம் அமைப்பவை சில. மறை மலையடிகளார், மணியரசர், பேராசிரியர் நமச்சிவாய முதலி யார், தமிழ்ப் பெரியார் திரு. வி. க. போன்ற தமிழ்நாட்டுத் தலைசிறந்த தமிழ்ப் பேரறிஞர்களுடன் பேராசிரியர் அவர்கள் பழகிய பழக்கத்தால் விளைந்த அநுபவ முத்துக்களாய் ஒளிர் வன சில. இளைஞர்கட்கும் பெற்றோர்க்கும் நல்லறிவு ஊட்டு வன சில. இங்ஙனம் பல்வேறு வகைப்பட்ட அரிய கருத்துக் களை ஆசிரியர் அவர்கள் தமக்கே உரிய எளிய இனிய நடையில் உள்ளத்தைத் தொட்டு உணர்வைத் தூண்டக் கூடிய வகையில் எழுதியுள்ளார்கள். இக்கட்டுரைகள் அனைத்தும் இளைஞர் முதல் முதியோர் வரை அனைவரும் படித்துப் பயன் பெறக் கூடியனவாகும்.

இத்தகைய மதிப்புயர்ந்த மணிகளாய் ஒளிரும் அழகிய கட்டுரைகளைத் தொகுத்து மாணவர் மன்ற வெளியீடாக வெளியிட அருள்கூர்ந்து இசைவு தந்த பேராசிரியர் அவர் கட்கு மன்றச் சார்பில் எங்கள் நன்றி கலந்த வணக்கத்தை அறிவித்துக் கொள்கின்றோம். இளைஞர்கள் முதல் அனை வர்க்கும் நல்வழி காட்டும் இவ்வநுபவக் கட்டுரைகளைக் கற்றுத் தமிழுலகம் பயன்பெற வேண்டும் என்பது எங்கள் விருப்பம். வணக்கம்.

17, இரத்தின முதலி தெரு, சென்னை-1
16—11—'61

இங்ஙனம்,
**சென்னை மாணவர் மன்றத்தினர்.**

# எல்லாப் பொருளும் இதன்பால் உள.

ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் எங்கள் ஆசிரியர் மணி திருநாவுக்கரசு முதலியார் என்பவர் சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் ஆறும் வகுப்பு மாணவர்களுக்குத் திருக்குறள் பாடம் நடத்தத் துவங்கியபோது திருவள்ளுவரைக் குறித்தும் அவர் இயற்றிய திருக்குறளைக் குறித்தும் முன்னுரையாக ஒரு சில கூறி முடிவில் திருவள்ளுவமாலை என்னும் நூலிலிருந்து ஒரு பாடலையும் மேற்கோளாக எடுத்துக் கூறினார். அது வருமாறு :

"எல்லாப் பொருளும் இதன்பால்உள ; இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்—சொல்லால்
பரந்தபா வால்என் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை."

எங்கள் பேராசிரியர் இந்தப் பாடலைக் கூறி இதற்குப் பொருளும் உரைத்தனர். அப்போது ஒரு மாணவன் எழுந்து, "ஐயா! எல்லாப் பொருளும் இதன்பால் உள என்பது உண்மையா?" என்று ஆச்சரியத்தோடு வினவினான்.

உடனே அந்த ஆசிரியர், "உன்போன்ற ஒரு சில மாணவர்கள் ஐயுறுதல்கூடும் என்று இதனை இயற்றிய மதுரைத் தமிழ்நாகனர் என்னும் புலவர், 'எல்லாப் பொருளும் இதன்பால் உள' என்று நேர்முகத்தால், கூறியதோடு நில்லாமல் எதிர்மறை முகத்தானும் 'இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை யால்' என்று கூறியிருக்கிறர். மேலும் உனக்கு இதில் தெளிவு ஏற்படாவிட்டால் திருவள்ளுவர் தம் திருக்குறளிலே எந்தப் பொருளைக் குறித்து விளக்காமல் இருந்து விட்டார் என்பதைத் தெரிவிப்பாயானல் நான் அதற்கும் தக்க விடை கூறி உன் ஐயத்தைப் போக்குகின்றேன்," என்றர்.

அந்த மாணவன் அவர் கூறியதன் கருத்தை உணர்ந்து கொள்ளாமல் உடனே எழுந்திருந்து, "ஐயா! இந்தக் கல்லைக் குறித்துத் திருவள்ளுவர் எங்கேயாவது கூறியிருக்கின்றரா?" என்று சொல்லிக் கொண்டே பொருள்கள் காற்றல் பறந்து செல்லாமல் இருப்பதற்காக மேசையின்மீது வைக்கப்பட்டிருந்த கண்ணடி போன்ற ஒரு கூழாங்கல்லினைக் குறித்துக் காட்டினன்.

அப்போது அந்த ஆசிரியர், "இந்தக் கல்போன்ற மூளையுடையோர்கூட எளிதில் புரிந்து கொள்ளும்படி இதைப்பற்றி ஒன்றுக்கு மூன்று பாட்டாக வள்ளுவர் கூறியிருக்கின்றர்," என்று கூறி அந்த மூன்று குறள்களையும் சொல்லி அவைகட்கு ஒரு சிறு விரிவுரையும் ஆற்றினர். அக்குறள்கள் வருமாறு :

"வீழ்நாள் படாஅமை நன்றற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்கும் **கல்.**" (குறல் 38)

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் **கல்.**" (குறள் 505)

என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று **கல்** நின்றவர்." (குறள் 771)

இவைகளைக் கேட்டதும் அந்த மாணவர்களுக்கு மகிழ்ச்சி மேலிட, மேலும் ஒருவன் உடனே எழுந்து தன் கையில் வைத்திருந்த எழுது கோலைக் காட்டி, "ஐயா! இதைக் குறித்தும் வள்ளுவர் எங்கே யாவது குறிப்பிட்டிருக்கிறாரா?" என்று ஆவலோடு வினவினான்.

ஆசிரியர்: எழுதுகோல்தானே! இதை ஆடவர் மட்டும் அன்றிப் பெண்களும் உணர்ந்து கொள்ளட்டும் என்று காமத்துப் பாலிலேயே சொல்லியிருக்கின்றாரே, என்று சொல்லி "எழுதுங்கால் கோல் காணாக் கண்ணே போல்" என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே அந்தப் பாடத்தின் முடிவைத் தெரிவிக்கும் மணி அடித்து விட்டது.

அப்போதும் வேறொரு மாணவன் மிகவும் அவசர மாக, "ஐயா! மணியைப் பற்றிக் கூடத் திருவள்ளு வர் கூறியிருக்கின்றாரா? என்று மிகவும் ஆவலோடு வினவினான்.

எங்கள் ஆசிரியர் பெயரும் மணி திருநாவுக்கரசர். ஆதலால் அவர் உடனே, "மாணவ மணியே, திருவள் ளுவர் நீ கேட்கும் மணியையும் கூறி அந்த மணியிலும் சிறந்ததாக நம் கண்களில் உள்ள கருமணியைக் கூட மிக அழகாகக் கூறியிருக்கிறார். இதை அடுத்த தமிழ் வகுப்பிலே விளக்கிக் கூறுவேன்," என்று சொல்லிக்

கொண்டே எழுந்திருக்கும்போது தம் தலைக்கு மேலே தொங்கிக் கொண்டிருந்த மின்சார விளக்கு தலையில் பட்டுவிடுமோ என்று மேலே நோக்கினார்.

அப்போது மற்றொரு மாணவன், "ஐயா! இந்த விளக்கைப் பற்றியும் வள்ளுவர் சொல்லியிருந்தால் தயைசெய்து அதைமட்டுமாவது சொல்லிச் செல்லுங்கள்," என்று ஆவலோடு வினவினான்.

உடனே எங்கள் ஆசிரியர், "ஒரு விளக்கு அல்ல நான்கு விளக்கு வேண்டுமானாலும் சொல்லுகிறேன், கேட்டுக் கொள்" என்று சொல்லி "எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு," என்று சொல்லிக் கொண்டே அந்த வகுப்பறையை விட்டு வெளியே வந்தார்.

அப்போது அந்த மாணவர்களுக்கு அந்த ஆசிரியர்மீது எவ்வளவு மதிப்பு இருந்திருக்கும் என்பதை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதே யில்லை.

அன்று பகல் 1-30 மணியிருக்கலாம்; ஆசிரியர் பலரும் பகலுணவு உட்கொண்டு ஓய்வு கொள்ளும் அறைக்கு வந்து சேர்ந்திருந்தனர். எங்கள் மணி பரசர் எல்லோருக்கும் நடு நாயகமாக ஒரு சாய்வு நாற்காலியிலே சாய்ந்து கொண்டு ஒவ்வொரு நாளும் எதையாவது நகைச்சுவை தோன்றக் கூறி அங்குள்ள ஆசிரியர்களை மகிழ்விப்பது வழக்கம்.

அவர் கூறுவதைக் கேட்டு மகிழ்வதற்கு மாணவர்களுள் சிலரும் அங்கே வந்து ஒரு புறமாக ஒதுங்கி நின்று கொண்டிருப்பர். அன்று தமிழ்ப்பாட சம்பந்தமாக மாணவர்கள் கேட்ட கேள்விகளையும் அவற்றிற்கு

மணியரசர் அளித்த விடைகளையும் அங்குள்ள ஆசிரியர்களிடம் கூறிக் கொண்டிருந்தார். அப்போது அங்குள்ள ஆசிரியர்களுள் ஒருவர் ஓவிய ஆசிரியர்; வயதிலும் சிறிது முதிர்ந்தவர். ஆதலால் அவர் மிகவும் உரிமையோடு எதையாவது எப்போதும் கேட்டபடியே இருப்பர். எங்கள் ஆசிரியர் திருக்குறளின் பெருமையைக் குறித்துச் சொல்லிக் கொண்டிருக்கும்போது அந்த ஓவிய ஆசிரியர், "ஐயா புலவரே, நான் ஒன்று கேட்கின்றேன்; சொல்லுங்கள் பார்ப்போம்,'' என்று மிகவும் மிடுக்கோடு கேட்டார்.

**மணியரசர் :** ஐயா ஓவியரே! அதைத் தயை செய்து தெரிவியுங்கள; என்னால் முடிந்தால் சொல்லுகிறேன்.

**ஓவியர் :** நம்முடைய நகராண்மைக் கழகத்தார் சென்னையிலே ஒவ்வொரு தெருவிலும் இருபுறமும் அமைத்துள்ள அந்த அருமையான சாக்கடையைக் குறித்து உங்கள் திருவள்ளுவர் ஏதாவது சொல்லியிருந்தால் தெரிவியுங்கள்.

**மணியரசர் :** சாக்கடை குறித்துத் திருக்குறளில் மட்டுமன்று; நாலடியார் என்னும் நூலிலிருந்தும் நான் எடுத்துக் காட்டுவேன். சாக்கடை என்பதற்கு அங்கணம் என்றும் பெயர்.

"**அங்கணத்**துள் உக்க அமிழ்தற்றால் ''

குறள் 720

'' **ஊரங்கண** நீர் உரவுநீர்ச் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம் ''

நாலடியார் 175

இங்ஙனம் அந்த இரண்டு பாடல்களையும் கூறி அவற்றில் உள்ள நயங்களையும் அழகுபெற நாவரசர் விளக்கிக் கூறினர். உடனே அங்கேயிருந்த ஒவ்வொரு ஆசிரியரும் ஒவ்வொரு கேள்வியைக் கேட்கத் துவங்கி விட்டார்கள். அவைகளுள் ஒரு சிலவற்றை மட்டும் இங்கே எடுத்துக் கூறுகின்றேன்.

**கேட்ட பொருள்கள் :** 1. உப்பு, 2. குன்றிமணி 3. ஆமை, 4. முதலை, 5. ஆந்தை, 6. கயிறு 7. கருப்பு, 8. கொக்கு, 9. எள்.

**விடைகள் :** (மூன்றுக்கு மட்டும்)

1. நட்பிற்கு உறுப்புக்கெழுதகைமை மற்றதற்கு
   உப்பாதல் சான்ேறார் கடன்.

2. குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
   குன்றி அனைய செயின் (குன்றி-குன்றிமணி)

3. ஒருமையுடல் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
   ஏழுமையும் ஏமாப் புடைத்து.

இவ்விதம் அவர் ஒவ்வொன்றுக்கும் சிறிதும் சலிப் படையாமல் காளமேகப் புலவர் போல் கூறிக் கொண் டிருக்கும்போது ஒருவர் தும்மினர். உடனே அந்த ஓவிய ஆசிரியர், "ஐயா புலவரே, உங்கள் வள்ளுவர் தும்மலைக் கூடக் குறளில் குறிப்பிடுகிருர் என்றும் சொல்லுவீர் போலும்!" என்று ஐயத்துடன் கூறினர்,

**மணியரசர் :**

நினைப்பது போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்.

என்றார். "அப்படியானல் வள்ளுவர் இவ்வுலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் தம் குறட்பாவிலே அடக்கிச்

சொல்லிவிட்டார் என்றே நிலைநாட்டல் உங்கள் விருப்பமோ'' என்று அவர் எங்கள் ஆசிரியரை வினவினர்.

"அஃது என் கருத்து அன்று. வள்ளுவர் இயற்றிய இந்நூலை அகராதியைப் போன்றோ நிகண்டைப் போன்றோ நான் சிறிதும் எண்ணவேயில்லை. மாணவர்களுக்கு வகுப்பில் எடுத்துக் கூறியதை ஒரு விளையாட்டாகவே கொள்ளுதல் வேண்டும். அவர்களுக்கு நினைவாற்றலையும் சொல்லாற்றலையும் ஊக்குவித்தற்காகவே அவ்வாறு கூறினேன்" என்றார்.

அப்படியானால் "மதுரைத் தமிழ் நாகனார் பாட்டுக்கு நீங்கள் எவ்விதம் பொருள் கண்டிருக்கின்றீர்கள்?" என்று அவர் வினவினர்.

அதற்கு எங்கள் ஆசிரியர் மணி திருநாவுக்கரசர் கீழ் வருமாறு விடையளித்தார் ;

''எல்லாப் பொருள்களும் இதன்பால் உள" என்பதற்கு உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் என்பது கருத்தன்று. மக்கள் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாச் செய்திகளைக் குறித்தும் திருக்குறளில் வள்ளுவர் சொல்லியிருக்கின்றார் என்றே பொருள் கொள்ளுதல் வேண்டும். "இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லையால்" என்பதற்கும் திருக்குறளில் சொல்லப்பெறாத எப்பொருளும் வேறு எந்த நூல்களிலும் இல்லை என்பதும் மக்கள் வாழ்க்கைக்கு வேண்டிய இன்றியமையாத செய்திகளையே குறிக்கும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் இந்த நான்கினையும் திருவள்ளுவர் மூன்று பாலில் அடக்கிக் கூறியிருக்கின்றார் என்று அறிஞர்கள் பலரும் கூறும் கருத்தே

மதுரைத் தமிழ் நாகனுரின் கருத்தாகும்" என்ருர். அப்போது அங்கிருந்தவர்கள் அந்தப் பாடலின் கருத்து அவ்விதம்தான் இருத்தல்வேண்டும் என்று ஒரு முகமாக முடிவுக்கு வந்தனர்.

இவ்விதம் சொல்லிக் கொண்டிருக்கும் பொது 'டாங்கு டாங்கு என்று பாடசாலே மணி அடித்ததால் அந்தக் கூட்டம், அவ்வளவோடு முடிந்தது. அங்கே யிருந்த மாணவர்களும் பிற ஆசிரியர்களும் 'குறளில் இல்லாப் பொருளும் உலகில் இல்லே. இந்த ஆசிரியருக்குத் தெரியாத பாடலும் தமிழில் இருக்க முடியாது' என்று கூறிக் கொண்டே சென்றனர்.

(2)

# குளிர்கால வருணனை



வருணனை என்பது நேரில் கண்டு வியந்த ஒன்றினைக் குறித்து ஒருவன் பிறனொருவனிடம் அழகுபெற விளக்கிக் கூறுதல் ஆகும். அதனைத் தமிழர் அணி எனவும், வட மொழியாளர் அலங்காரம் எனவும் உரைப்பர்.

புலமை மிகுந்த பெரியோர், தம் கற்பனைத் திறனால், தாம் கனவிலும் கண்டறியாத ஒன்றினைக் குறித்துச் சொல்லழகு, பொருளழகு ததும்பப் புனைந்து கூறுவர். அவ் வருணனைகள் பல்வகைப் பட்டிருப்பினும், பொதுவாக உயர்வு நவிற்சி, இயல்பு (தன்மை) நவிற்சி என்னும் இருவகையுள் அடங்கிவிடும்.

'மலை போன்று உயர்ந்த தோள்கள்' எனவும், 'கடல் போன்று அகன்ற கண்கள்,' எனவும் கூறப்படுவன உபசார உரைகள் அன்றி உண்மையுரைகள் அல்லவாகலின், உயர்வு நவிற்சியே யாகும். 'மாந்தளிர் போன்ற மேனி' எனவும், மாவடு வகிர்ந்தாலொத்த கண்கள் எனவும் வருவன பெரிதும் பொருத்தமுடைமையின், இயல்பு நவிற்சி (தன்மை)யுள் அடங்கும். அன்றியும், உவமை சிறிதும் இன்றி, உள்ளன

உள்ளவாறே கூறப்படுவனவும் இயல்பு நவிற்சியே யாகும்.

முற்காலத்தே நம் தமிழ்நாட்டிலே பெரும் புகழ் கொண்டு விளங்கிய புலவர் பலரும் இயற்கை வருணனையினையே பெரிதும் போற்றிவந்தனர், அத்தகைய பெரும்புலவருள் ஒருவராகிய நக்கீரனார் பாடிய நெடுநல் வாடை என்னும் பாட்டில் வரும் குளிர்கால வருணனையினை உரைநடையில் ஒருவாறு சுருக்கிக் கூறுகின்றேன்.

"உலகமெல்லாம் குளிரும்படி மேகம் கார் காலத்து மழையினைப் பெய்தது ; வளைந்த கோலினைத் தாங்கிய ஆயர், அம்மழை வெள்ளத்தின் மிகுதியைக் கண்டு வெறுத்துத் தம் ஆடு மாடுகளை மேட்டு நிலங்களில் மேயவிட்டுந் தம் இருப்பிடம் நீத்து வேறு இடம் தேட நேர்ந்தமைக்கு வருந்தலாயினர். அவர்கள் அணிந்திருந்த பூமாலைகள் மழையினால் நிலை குலைந்திருந்தன. ஆதலின், அவர்கள் ஒன்று கூடித் தங்களிடமிருந்த நெருப்புச் சட்டியில் கையைக் காயவைத்துக் கன்னங்களில் ஏற்றிக் கொள்ளலானார்கள்.

"குளிரின் மிகுதியால்' ஆடுமாடுகள் மேய்தற்றொழிலையும் மறந்து ஏங்கி நின்றன. குரங்குகள் கூனிட்டுக் கிடந்தன. மரங்களில் தங்கி இருந்த பறவைகள் வாடையின் கொடுமை பொருது நிலத்தே விழுந்தன. பசுக்கள் குளிர் மிகுதியால் தங்கள் கன்றுகளுக்குப் பால் கொடாது அவற்றை உதைத்துத் தள்ளின.

"மழை வெள்ளத்தின் வேகத்திற்கு ஆற்றாத கெண்டை மீன்கள் மெதுவாக நீர்வற்றிய மணல்

திட்டுகளின் அருகே வர, அவற்றின் வருகையை நோக்கி வாடியிருந்த பைங்காற்கொக்குகளும், செவ்வரி நாரைகளும் ஆங்காங்கே இருந்து, அவற்றைப் பிடித்துத் தின்னலாயின.

"நீர் நிறைந்த அகன்ற வயல்களில் செழுமையுடன் வளர்ந்திருந்த நெற்கதிர்கள் மழையினால் தலை வணங்கி நின்றன. பருந்துயர்ந்த கமுக மரங்களின் குலைகள் உருண்டு, திரண்ட பசுங்காய்களுடன் கண்களுக்கு அழகு தந்து நின்றன. மண மிகுந்த மலர்களைக் கொண்டிருந்த அகன்ற சோலைகள், மழையின் மிகுதியால் பூக்கள் உதிரவும் நீர்த் துளிகள் துளிர்க்கவும் நின்றன.

"இருபுறங்களிலும் மாட மாளிகைகள் ஓங்கி விளங்க, இடையே ஆறு போன்று அகன்றிருந்த நீண்ட வீதிகளில், இறுகிய தோளும் முறுக்கேறிய உடலும் பெற்ற மிலேச்சர். கள்ளுண்டு மகிழ்ந்து, சிறு தூறலுக்கு அஞ்சாராய்த் திரியலாயினர்.

"மழையினால் பொழுதறிய இயலாத மகளிர், தட்டில் இருந்த பிச்சிப் பூக்கள் மலர்ந்ததால் மாலைப் பொழுதாயினமை உணர்ந்து நெல்லையும் மலரையும் தூவித் தம் இல்லுறை தெய்வத்தை வணங்கலாயினர். வீட்டில் வளரும் புறாக்கள், மழையினால் இரவு பகல் அறியாது, இரையுண்ணவும் விரும்பாது, பறத்தலும் தவிர்த்துக் கால் மாறி நின்று காலங்கழித்தன.

"காவலோடு கூடிய பெரிய மாளிகைகளிற் குற்றேவல்புரியும் இளைஞர், கரிய சாத்தம்மியிலே கத்தூரி முதலிய வாசனைக் கலவையினை அரைக்க வட

நாட்டினின்று கொணர்ந்த வெண்கல், தென்றிசைச் சந்தனக் கட்டையுடன் பயனின்றிக் கிடந்தது.

"குளிரின் மிகுதியால் மகளிர் தம் கூந்தலினை மாலையிட்டு முடியாமல் மங்கலமாகச் சில மலரிட்டு முடிக்க விரும்பிச் சந்தன விறகிலே நெருப்பை உண்டாக்கி, அதிலே அகிற்கட்டையினையும், கண்ட சருக்கரையும் கூட்டிப் புகைத்தனர்.

"பல வேலைப்பாடுகளுடன் விளங்கிய சிவந்த ஆலவட்டம், உறையிடப் பெற்றுச் சிலந்தி வலை சூழ, வளைந்த மரச் சட்டத்திலே தொங்கிக் கொண்டிருந்தது. பெரிய மாளிகையில் தென்றலின் பொருட்டுத் தென் புறமாக அமைக்கப் பட்டிருந்த கதவுகள் அழுத்தமாகத் தாளிடப்பட்டுக் கிடந்தன. வாடையின் கொடுமையால், மக்கள் குவிந்த வாயினையுடைய குடத்திலிருந்த தண்ணீரைப் பருகாதவர்களாய் அகன்ற வாயினையுடைய கலயங்களில் இட்ட நெருப்பின் வெம்மையினை விரும்பினர்கள்."

மாணவர்களே, இப்புலவர் பெருமானார் குளிர் காலத்தின் இயல்பினைப் புனைந்துரை சிறிதும் இன்றி அழகு பெற விளக்கிக் கூறியிருத்தலைக் கூர்ந்து நோக்கி இன்புறுங்கள். சிறந்த ஓவியப் புலவனாலும் சித்திரித்துக் காட்ட இயலாத சின்னஞ்சிறு நிகழ்ச்சிகளையும் இப்புலவர் தம் நுண்ணுணர்வால், கற்போர் உள்ளம் கவருமாறு எடுத்துரைக்குந் தன்மை பெரிதும் பாராட்டற் பாலது. பண்டைத் தமிழ் நூல்களில் இத்தகைய வருணனைகள் மலிந்திருத்தலை நாம் காணலாகும்.

# (3)

## மாணவர் நெறி



மாணவர் என்னும் சொல்லுக்குப் பலர் பலவிதம் பொருள் கொள்வர். எனினும், நம் நாட்டுப் பெரியோர் பலரும் 'மாட்சிமைக்கு உரியவன்' என்றே பொருள் கொள்கின்றனர். நன்னூலார் மாணாக்கரைக் குறித்துக் குறிப்பிடும் சூத்திரத்தில்

"அன்னம் ஆவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடம் ஆடெருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடை மாணாக்கர்"

என மாணவர்களை மூவகையினராகப் பிரிப்பினும் அன்னம் போன்று நல்ல பொருளையே மனத்திற் கொள்பவனும், பசுப்போல் அந்த நல்ல பொருளைப் பலமுறை ஆழ்ந்து சிந்தித்துத் தனக்கு உரிமையாக்கிக் கொள்பவனுமே சிறந்த மாணவன் ஆவன். சொன்னதைச் சொல்லும் கிளி போன்றவனும், இல்லிக்குடம் போன்று ஒரு காதில் வாங்கி மற்றொரு காதில் விடுபவனும் நல்ல மாணவன் ஆகான் என்பதை விளக்குதற்காகவே அவ்விரு பாலரையும் இடை மாணாக்கன் எனவும் கடை மாணாக்கன் எனவும் பகுத்துக் கூறினர். அன்றியும் மாணவனுக்கு ஒழுக்கம் மிகவும் சிறந்தது என்பதைக் குறிப்பிடுவதற்காகவே நன்னூலார்,

" களி, மடி மானி, காமி, கள்வன்
பிணியன், ஏழை, பிணக்கன், சினத்தன்

துயில்வோன், மந்தன், தொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன், தறுகணன் பாவி படிறன் ''

ஆகிய இன்னோர்க்கு ஆசிரியர் பகரார் நூலே என்று சூத்திரம் செய்தனர்.

ஒருவன் தான் கற்றவைகளை மறந்து விட்டாலும் மறுபடியும் வருந்திக் கற்று உணர்ந்து கொள்ளலாம். ஆனால் ஒழுக்கத்திலிருந்து ஒருவன் தவறினால் அவனால் மீண்டும் அந்த நற்பெயரைப் பெற இயலாது என்று வள்ளுவர் ஒழுக்கத்தின் உயர்வைச் சிறப்பித்துக் கூறியுள்ளார். ஆதலால் மாணவர்கள் அத்தகைய ஒழுக்க நெறியில் நின்று அதனைத் தம் உயிரினும் சிறந்ததாகக் கருதுதல் வேண்டும்.

பாடங்கேட்க விழையும் மாணவன் முதலில் தன் ஆசிரியரிடம் பெருமதிப்பு வைத்தல் வேண்டும். பாடங் கேட்கும் முறையினைப் பவணந்தியார் மிக அழகாக விளக்கிக் கூறுகின்றார்.

" கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன் குறிப்பில் சார்ந்து
இருஎன இருந்து சொல்எனச் சொல்லிப்
பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகிச்
சித்திரப் பாவையின் அத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சு களனாகக்
கேட்டவை கேட்டவை விடாது உளத்து அமைத்துப்
போஎனப் போதல் என்மனார் புலவர் ''

இது பழங்காலத்திய மிகவும் பிற்போக்கான ஒரு முறை என்று மாணவன் சிறிதும் எண்ணுதல்கூடாது.

கூர்ந்து நோக்கினல் இந்தக் காலத்துக்கு மட்டும் அன்று, இனி வருங்காலத்துக்கும் ஏற்றது என்பதை யும் சிறந்த மாணவர்கள் இந்தக் காலத்திலும் இவ்விதம் ஒழுகி வருதலையும் நாம் உணரலாகும்

இவ்விதம் கற்றலோடு அமையாது மாணவர்கள் தாம் கற்றவற்றை மறவாது போற்றுதல் வேண்டும். ஆரும் வகுப்பில் கற்ற குற்றியலுகர 'இலக்கணத்தை அந்த வகுப்பிலேயே மறந்தொழிந்து ஏழாம் வகுப் பிலும் எட்டாம் வகுப்பிலும் அதே குற்றியலுகர இலக் கணத்தை முற்றிலும் புதுமையாகக் கேட்பவன் சிறந்த மாணவன் ஆகான். ஒருமுறை தான் கற்றவைகளை மறு முறை நினைத்துப் பார்த்து ஐயம் எழுமேல் தன் தோழ ரிடமோ அன்றி ஆசிரியரிடமோ கேட்டுத் தெளிந்து கொள்ளுதல் வேண்டும். இவ்வித மெல்லாம் கற்றே நம் நாட்டுப் பெரியோர்கள் பேரும் புகழும் பெற்றனர்.

இனி, மக்கள் வாழ்க்கையைக் குழவிப் பருவம், மாணவப் பருவம், வாலிபப் பருவம், முதுமைப் பருவம் என நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். இந்த நான்கு பருவங்களுள் மாணவப் பருவம் மக்கள் வாழ்க் கைக்குக் கடைகால் போன்றது. ஒருவர் தம் வாழ்க் கையை உயர்த்திக் கொள்ளுதற்கும் தாழ்த்திக் கொள்ளு தற்கும் காரணமாக இருப்பது மாணவப் பருவமே, அறிவு விளக்கத்துக்கும், பொருள் திரட்டுதற்கும், பேரும் புகழும் பெறுதற்கும். பிற எல்லா நலன்களையும் பெறுதற்கும் வழிகோலுவது இந்த மாணவப் பருவமே ஆகும்.

இத்தகைய அருமையான பருவத்தைப் பெற் றுள்ள மாணவர்கள் இதனை நல்ல வழியில் பயன்

படுத்த முயலுதல் வேண்டும். ஒவ்வொரு மாணவனுக்கும் அவனவன் சூழ்நிலைக்கு ஏற்பப் பலப்பல வழிகள் அமைந்திருப்பினும் பொதுவாக எல்லோருக்கும் பயன்படத்தக்க நெறி ஒன்று உண்டு. இந்தப் பெருநெறியினையே எல்லா நூல்களும் பலப்பல வகையால் மக்களுக்கு வகுத்துரைக்கின்றன. இதனையே நல்லொழுக்கம் என்று கூறுவர். இத்தகைய நல்ல நெறியில் ஒரு மாணவன் ஒழுக வேண்டுமானால் அவனுக்கு ஒரு நல்ல குறிக்கோள் இருத்தல் வேண்டும். குறிக்கோள் இல்லையேல் 'குன்றில் முட்டிய குரீஇப்போலவும் குறிச்சி புக்க மான் போலவும் மாணுக்கன் இடருறுவான்'.

குறிக்கோள் உயர்ந்ததாக மட்டும் இருந்தால் போதாது. மாணவன் தன் நிலை, தன் நாட்டு நிலை, காலநிலை முதலிய பலவற்றையும் நன்கு சிந்தித்து அவைகட்கு ஏற்றவண்ணம் தன் குறிக்கோளை வகுத்துக் கொள்ளுதல் வேண்டும்

உலகம் எந்நிலையில் உள்ளது? நாம் எந் நிலையில் உள்ளோம்? பிற நாட்டினரோடு சரிசமானமாக வாழ நாம் யாது புரிதல் வேண்டும்? இவை போன்றவைகளையும் மாணவன் சிந்தித்தல் வேண்டும்.

முதலில் மாணவன் தன் உடல் நிலை, உள்ள நிலை ஆகிய இரண்டினையும் ஒழுங்கு படுத்திக் கொள்ளுதல் வேண்டும். நல்ல உணவு, உடற்பயிற்சி இவ்விரண்டும் உடல் நிலைக்கு இன்றியமையாதவை. உள்ளத் தூய்மை, உள்ளக் கிளர்ச்சி ஆகிய இவைகளும் வாழ்வில் முன்னேற விரும்பும் ஒரு மாணவனுக்கு மிகவும் இன்றியமையாதவை.

அடுத்தபடியாக அவன் தன் குடும்பநிலை, தன்னைச் சூழ்ந்துள்ள சுற்றத்தார், நண்பர் முதலியவர்கள் நிலை ஆகிய இவைகளை நன்கு சிந்தித்து ஆவன புரிய முயலுதல் வேண்டும். முடிவில் நாட்டு நிலை, உலக நிலை முதலியவைகளைக் குறித்து நினைந்தும் பாடு பட எண்ணுதல் வேண்டும். இத்தகைய உயர்ந்த குறிக்கோளினைத் தன் உள்ளத்திலே கொண்டு மாணவன் தன் மாணவப் பருவத்தினைப் பயன்படுத்திக் கொள்ள முயன்றால் அந்தப் பருவம் அவனுக்கு மிகச் சிறந்த பருவமாகவே இருக்கும். அந்த மாணவன் பிறகு அடைய வேண்டிய எல்லா நலன்களையும் பெற்று இன்புற்று வாழ்தல் கூடும்.

இதற்கு எடுத்துக் காட்டாக எத்துணையோ புலவர்களையும், செல்வர்களையும், பேரறிஞர்களையும், வள்ளல்களையும் நம் நாட்டு வரலாறுகளிலிருந்தும், பிறநாட்டுச் சரிதைகளிலிருந்தும் என்னால் விரிவாகக் கூற முடியும். எனினும் நம் நாட்டுப் பேரறிஞர்களாகிய இரண்டொரு பெரியோர்களின் குறிக்கோள்களை மட்டிலும் நான் அவர்களிடம் நேரில் கேட்டறிந்த செய்திகளைக் கொண்டு சுருக்கிக் கூறுகின்றேன்.

பேராசியர் காவேரிப்பாக்கம் நமச்சிவாய முதலியார் பலவகைச் செல்வங்களோடும் பெரு வாழ்வு வாழ்ந்தவர். ஆனால் அவர் இளமையில் அத்தகைய பெருஞ் செல்வத்துள் திளைத்த குடும்பத்திலே தோன்றியவரல்லர். அவர் ஆரம்பப்பள்ளி ஆசிரியராக வருதற்கே மிகவும் முயன்றதாக என்னிடம் தெரிவித்திருக்கின்றார். ஆனால் அவர் தம் இளம்பருவத்திலிருந்தே உயர்ந்த குறிக்கோள் உடையவராக இருந்தார். அவர் தம் குறிக்

கோள் யாது ? நன்ருகப் படிக்கவேண்டும். கற்ற கல்வியை நல்ல முறையில் பயன்படுத்த வேண்டும். வருந்திப் பொருள் திரட்டவேண்டும். தொகுத்த பொருளினைப் பலருக்கும் வாரி வழங்குதல் வேண்டும். இவையே அவர்தம் குறிக்கோள். அக்குறிக்கோளுக்கு ஏற்ப இலக்கணப் பெரும் புலவராக விளங்கிய மயிலை சண்முகம்பிள்ளை என்பவரிடம் மிகவும் கவலையோடு பாடம் கேட்டார் ; புது முறையில் இளஞ் சிறுவர்களுக்காகப் பாடப் புத்தகங்கள் எழுதினர் ; பெரும் பொருள் ஈட்டினர் ; சென்னை மாநிலக் கல்லூரிப் பேராசிரியராக இருந்து பேரும் புகழும் பெற்ருர் ; புலவர்கட்கும், ஏழை மாணவர்கட்கும், சுற்றத்தார்க்கும் தாம் ஈட்டிய பொருளினை வாரி வாரி வழங்கினர் ; என்றும் நிலைத்த புகழோடு அறுபது ஆண்டுகள் வாழ்ந்து மண்ணுலகிலிருந்து மறைந்தார்.

கல்விக் கடலாய் நம் நாட்டுச் சீர்திருத்த நோக்கங்கட்கெல்லாம் கலங்கரை விளக்கமாய், இலக்கண இலக்கிய ஆராய்ச்சிகளில் மிகவும் வல்லுநராய் இருந்து அண்மையில் மறைந்த பேராசிரியர் மறைமலை அடிகளாரைக் குறித்து இந்தச் சுருங்கிய கட்டுரையில் என்னல் எழுதவே இயலாது. அவர் ஆங்கிலம், செந்தமிழ், வடமொழி ஆகிய இம்மூன்றினையும் ஆழ்ந்து கற்றவர் ; உடலை வன்மையாக ஆக்கிக் கொள்ளவும் உள்ளத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்ளவும் பெரிதும் முயன்றவர். அன்றியும் அவர் தாமே தம் எளிய கல்லூரி வாழ்க்கையில் வரும் குறைந்த ஊதியத்திலிருந்து மாதம் மாதம் மிகுத்து வைத்துக் காகிதம் வாங்கியும், அச்சு எழுத்துக்கள் வாங்கியும், அச்சுப்

பொறி வாங்கியும் தாம் எழுதிய அரிய கட்டுரைகளை யெல்லாம் தாமே அச்சடித்து வெளியிட்டார். அவர் தம் நூல்கள் எல்லாம் என்றும் அழியாத ஆராய்ச்சி நூல்களாகச் சிறந்து விளங்குகின்றன. இத்தகைய அரிய ஆராய்ச்சி நூல்களை எழுதி வெளியிட வேண்டும் என்பதே அவர் தம் குறிக்கோள். ஆங்கிலத்திலும், தமிழிலும், பிற மொழிகளிலும் உள்ள மிகவும் அருமையான நூல்களையெல்லாம் ஆயிரக் கணக்கில் விலை கொடுத்து வாங்கி இரவும் பகலும் ஓய்வின்றிப் படித்து நம் நாட்டுக்கு அரிய பெரிய தொண்டுகளைப் புரிந்த அவரைப்போல் எவராலும் செய்து காட்ட இயலாது. அவர் ஒவ்வொன்றுக்கும் திட்டம் வகுத்துக் கொண்டு உழைத்தவர்; உயரிய தனித்தமிழில் அரிய நூல்களையெல்லாம் எழுதி வெளியிட்டவர். "நீங்கள் எவ்விதம் இவ்வளவு சிறந்த புலமையை அடைந்தீர்கள்?" என்று ஒருமுறை நான் அவரைக் கேட்டபோது "சிறந்தவைகள் என்று எனக்குத் தோன்றிய நூல்களையெல்லாம் நான் மனப்பாடம் செய்துவிட்டேன். ஆங்கிலம் தமிழ் ஒவ்வொன்றிலும் நான் இவ்விதமே மனப்பாடம் செய்தேன்" என்றார். ஆதலால் மாணவ மணிகளே! நீங்கள் உங்கள் பாடங்களை மனப்பாடம் செய்தற்குச் சிறிதும் தயங்காதீர்கள். டாக்டர் ஏ. எல். முதலியார், ஏ. ஆர். முதலியார் என்று பேச்சிலும் எழுத்திலும் பேரும் புகழும் பெற்று விளங்கும் இரு பேரறிஞர்களும் சிறந்த ஆங்கிலச் செய்யுள்களை யெல்லாம் நெட்டுருச் செய்தவர்களேயாவர். நம் சென்னை மாநிலக் கல்வித்துறைத் தலைவராய நெ. து. சுந்தர

வடிவேலு அவர்களும் மாணவர் சிறந்த நூல்களை நெட்டுருப் போடுதலால் பெறலாகும் பயனைக் குறித்து வற்புறுத்திக் கூறியிருக்கின்றார். நெட்ருப் போடுதலுக்கு மாணவர்க்கு ஊக்கம் தரும் வகையில் அரசாங்கப் பாடதிட்டங்களும் அமைந்திருக்கின்றன.

உலக நாடுகளோடு நம் நாடும் முன்னேற வேண்டுமானால், நம் நாட்டு மாணவர்கள் புதுப்புதுக் கருவிகளைச் செய்யும் சிறந்த விஞ்ஞானிகளாகவும், பொருள் ஈட்டும் துறையில் தேர்ந்த பெரு வணிகர்களாகவும், நம் நாட்டினை வளம் பெறச் செய்யவல்ல பெருந் தலைவர்களாகவும் விளங்குதற்கு வேண்டிய குறிக்கோளுடன் அரிய நூல்களை எல்லாம் ஆழ்ந்து கற்றல் வேண்டும். இந்த எண்ணம் மாணவர் உள்ளத்தில் என்றும் வேரூன்றி யிருத்தல் வேண்டும். உண்ணும் போதும், உறங்கும் போதும், உறங்கி எழும்போதும் இந்த எண்ணத்துடனே இருக்க மாணவர் பழகி வருவராயின் அவர்கள் எண்ணிய எண்ணங்களெல்லாம் எளிதில் நிறைவேறப் பெற்றுப் பேரும் புகழும் உற்றுப் பல்லாண்டு அன்புற்று இன்புற்று வாழ்வர். இஃது என் அனுபவ நெறி; பல சிறந்த பெரியோர்கள் நடந்து காட்டிய நன்னெறி; பாரதியார், கம்பர், வள்ளுவர் போன்ற பெரியோர்கள் பொன்னெழுத்தில் பொறித்துச் சென்ற உண்மை நெறி.

## ( 4 )

## இறவாப் புகழ் பெற்றவர்

சுமார் எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு, பம்பாய் இராச்சியத்தில் உள்ள ஒரு கோயிலின் முன்பு ஓர் இளைஞர் தற்கொலை செய்துகொள்ள முயன்றார். ஆ! அந்தக் கொடிய செயல் நிகழ்ந்திருக்குமானால், இன்று உலகத்தவரால் பாராட்டப் பெறும் நம் இந்திய நாடு சீரற்ற நிலையிலே, மதிப்பாரற்ற தன்மையிலே இருந்திருக்கும். நாம் சுய ஆட்சியைக் குறித்துக் கனவும் கண்டிருக்க முடியாது. உண்மையின் உயர்வினையும், அகிம்சா தத்துவத்தின் அருமையினையும், சத்தியாக்கிரகம், ஒத்துழையாமை இயக்கம் என்னும் புதுப்புது முறைகளையும் நாம் உணர்ந்திருக்கவே இயலாது. மேலும் சொல்ல வேண்டுமானால் நாம் இப்பொழுது மேற் கொண்டொழுகும் ஆதாரக் கல்வித் திட்டமே தோன்றியிருக்க இயலாது.

அந்த இளைஞர் இன்னார் என்பதை நான் உங்களுக்கு விளக்கிக் கூற வேண்டியதில்லை. அவர் தாம் உலகம் போற்றும் உத்தமர்; இறவாத புகழ் வாய்ந்த ஏந்தல்; புத்தருக்குப் பின் ஏசுநாதருக்குப் பின் வேறொருவர் தோன்றவே இயலாது என்று எண்ணிய எண்ணத்துக்கு மாறாகத் தோன்றி இந்த உலக அமைதிக்கே வழிகாட்டியாக விளங்கி அழியாப் புகழ்பெற்று அண்மையில் நம்மை விட்டு மறைந்த மகான் காந்தி அடிகளே ஆவார்.

காந்தி அடிகளார் போர்பந்தர் என்னும் ஊரிலே 1868-ஆம் ஆண்டு பிறந்தவர் என்பதும் இராச கோட்டை என்னும் ஊரில் உயர்நிலைப்பள்ளியில் கற்றுத் தேர்ந்து, இங்கிலாந்து சென்று பாரிஸ்டர் பட்டம் பெற்று இந்தியாவை அடைந்தவர் என்பதும், மிக இளமையிலேயே கஸ்தூரிபாய் என்னும் அம்மையை மணந்து புத்திரச் செல்வங்களோடு வாழ்ந்தவர் என்பதும், தென் ஆப்ரிக்காவில் உள்ள இந்தியருக்காக வெள்ளையருடன் போராடி வெற்றி கண்டவர் என்பதும், இந்தியாவிலே காங்கிரஸ் இயக்கத்திலே சேர்ந்து ஒத்துழையாமைப் போராட்டம், மதுக்கடை மறியல், உப்புக் காய்ச்சும் போராட்டம் முதலியன புரிந்து வெற்றி பெற்று நமக்குச் சுய ஆட்சியை வாங்கித் தந்தவர் என்பதும் நாம் அறிந்தனவே ஆகும்.

அத்தகைய பேரறிஞர் தம் இளம் பருவத்திலேயே தற்கொலை புரிந்துகொள்ள முயன்ற காரணம் என்ன என்பதை நாம் இங்கே சிறிது ஆராயலாம். உரிமையுடன் வாழும் எண்ணம் காந்தி அடிகளாருக்கு மிகவும் இளம் பருவத்திலேயே தோன்றி யிருந்தது. "பெரியோர் புரியும் ஒரு செயலைச் சிறியோர் செய்யலாகாதா? என் சிறிய தந்தை புகை பிடித்தால் நானும் ஏன் அவ்விதம் புரிதல் கூடாது ? சிறியோர்கட்கு மட்டும் ஏன் இந்த அடிமை வாழ்வு ?" என்று எண்ணினர் நம் இளைஞர் காந்தி அடிகளார். அதன் காரணமாக நேர்ந்த விபரீத எண்ணமே தற்கொலைச் செயலில் போய் முடிந்தது. காந்தி அடிகளாரைப் புகை பிடிக்கத் தூண்டியதற்கும் மற்றும் பல தீமைகளை நம் அடிகளார்

புரிய முயன்றதற்கும் காரணமாக இருந்தது அப்போது அவருக்கு இருந்த ஒரு தீய நட்பே ஆகும்.

நல்ல காலமாக அந்தத் தீய நட்பும் ஒழிந்தது. அவரும் அந்தக் கொடிய எண்ணங்களிலிருந்து மீண்டார். பெற்றோர் வளர்ப்பு முறையும் அவர்தம் சிந்தனை சக்தியும் அவரைக் காப்பாற்றின.

அவர் உண்மையின் உயர்வை, அகிம்சையின் அவசியத்தைப் பலமுறை ஆழ்ந்து சிந்தித்தார். பிறர்க்கும் விளங்க உரைத்தார்; நல்ல நூல்களையே தேர்ந்தெடுத்து அமைதியோடு கற்றுத் தெளிந்து அவ்விதம் ஒழுகவும் முயன்றார். அந்தச் சிறந்த ஒழுக்க நெறியே அவரை உலகம் போற்றும் உத்தமராக ஆக்கியது.

நம் நாட்டிலே இப்போது இரண்டு கொள்கைகள் சிறந்து திகழ்கின்றன. ஒன்று காந்தீயம், மற்றொன்று திருவள்ளுவம். இரண்டும் ஒப்புயர்வற்றவை. எனினும் எத்தனை பேர் அக்கொள்கைகளைக் கடைப்பிடிக்கின்றனர்? காந்தி அடிகளார் படத்தையும், திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளையும் வைத்துப் போற்றுவதால் மட்டும் பயன் சிறிதும் இல்லை. அவ்விரு பேரறிஞர்களும் தெரிவித்துள்ளவண்ணம் நடக்க முயலுதல் வேண்டும். தம்மால் இயன்ற அளவிலேனும் ஒழுக முயலுதல் வேண்டும்.

> 'கற்க கசடறக் கற்பவை; கற்றபின்
> நிற்க அதற்குத் தக'

என்றார் திருவள்ளுவர். காந்தி அடிகளார் இக் குறளை அறிவதற்கு முன்பே தாம் கற்றவைகளையும் கேட்டவைகளையும் நன்கு சிந்தித்துப் பார்த்து அவ்விதமே

ஒழுகித் தம் வாழ்க்கையில் வெற்றியும் கண்டார். பெற்றோரைத் தெய்வமாகப் போற்றி வாழ்ந்த சிரவணன் என்னும் இளைஞன் சரிதையைத் தம் இளம் பருவத்திலேயே கற்றார். அந்த இளைஞனைப் போன்றே தம் தந்தையாருக்குத் தொண்டுகள் புரிந்தும், தாய் மொழியினை வேதம் போல் போற்றிக் காத்தும் பேரும் புகழும் பெற்றார். நம் காந்தி அடிகளார் தம் தந்தையின் அனுமதி பெற்று ஒரு நாள் அரிச்சந்திரன் நாடகத்தைப் பார்த்தார். அதைப் பார்த்ததிலிருந்து தாமும் அவ்விதமே என்ன துன்பம் நேர்ந்தாலும் உண்மையே பேசவேண்டும் என்னும் விரதத்தை மேற்கொண்டார். அந்த ஒன்றே அவரைத் தம் வாழ்க்கையில் உயர்த்தியது; அவரை உலகம் போற்றும் உத்தமராக ஆக்கியது.

காந்தி அடிகளார் ஏழைகளுக்காகவே நூல் நூற்றார்; தாமும் எளிய வாழ்வில் வாழ்ந்து வரத் துவங்கினார். நீதிக்காகவும் நேர்மைக்காகவுமே போராடினார்; பிறர் அறியாமல் புரிந்த தவறுகளையெல்லாம் தம் பெருந்தன்மையால் பொறுத்துக் கொண்டார்; தம்மைப் போலவே தம் மனைவியும் மக்களும் பிறர் நலத்துக்காகவே வாழவேண்டும் என்று விரும்பினார். நம் நாட்டுப் பெண்மணிகளின் கற்பு நெறியினையும், பொறுமைக் குணத்தையும் கண்டு பாராட்டினார். சமூக முன்னேற்றத்துக்கு வழிகோலும் ஆதாரக் கல்வி முறையினைக் கண்டறிந்து உலகுக்கு உதவினார்; உடல் வளர்ச்சியினையும் ஒழுக்க வளர்ச்சியினையும் குறிக்கோளாகக் கொண்ட இந்த ஆதாரக் கல்வி முறையைக் குறித்துப் பலப்பல கட்டுரைகள் எழுதியிருக்கின்றார்.

"நான் எழுதி வரும் இந்த ஆதாரக் கல்வி முறைக் கட்டுரைகளின் உண்மைப் பொருளை இந்த நாட்டு மக்கள் என்றேனும் உணர்வார்களா? அல்லது என் எழுத்துக்களெல்லாம் விழலுக்கு இறைத்த நீர் போல் ஆகி விடுமோ?'' என்றெல்லாம் வருந்திக் கூறியிருக்கின்றார். அவர் எண்ணம் வீண் போகாமல் அவர் காலத்திலேயே கொழுந்து விட்டுத் தளிர்க்கத் துவங்கியது. இப்பொழுது நம் அரசாங்கத்தார் ஆங்காங்கு நடத்தி வரும் ஆதாரக் கல்வி முறையின் சிறப்பினை நம் காந்தி அடிகளார் உயிருடன் இருந்து பார்ப்பாராஞல் பேருவகை எய்துவார். ஆனல், ''அந்தோ! மதப்பற்று மிக்க ஓர் அவசரக்காரரால் நம் காந்தி அடிகளார் நம்மை விட்டு மறைந்தனரே!" என்று நீங்கள் வருந்துகின்றீர்கள். நான் கூறுகின்றேன் அவர் இன்னும் உயிருடன் இருக்கின்ருர், ஒரு சிறிய உடலில் கட்டுப்பட்டிருந்த அவர் தம் ஆருயிர் இவ்வுலகம் முழுதும் பரவி அவர் தம் அடிப்படைக் கொள்கைகளைப் பரப்பி வருகின்றது. ஆதலால் இந்தப் பார் உள்ளளவும், பாரில் உள்ள நீர் உள்ளளவும் அவர் புகழ் அழியாது. உலகில் உண்மை உள்ளளவும் உயரிய ஒழுக்க நெறிகள் உள்ளளவும் அவர் ஒளிவிட்டுத் திகழ்வார். அவர் தம் பொன்னுடலம் மறைந்தாலும் புகழுடம்பு என்றும் மறையாமல் ஓங்கித் திகழும். அவர் அமரராய் வாழ்ந்து நம் அனைவரையும் ஆதரிப்பார். அவர் வகுத்துக் காட்டிய ஆதார முறை மேன் மேலும் சிறப்புற்றுத் திகழும். நம் குழந்தைகளெல்லாம் அவர் தம் அடிச்சுவட்டினைப் பின்பற்றி நடப்பர்.

# (5)

## கற்ற வண்ணம் ஒழுகுதல்

[மணிவண்ணன் கல்லூரி மாணவன். அவனுக்கு இளையவன் கணிகண்ணன். அவன் எட்டாம் வகுப்பு மாணவன். இவர்கள் இருவருக்கும் உரையாடல் நிகழ்கின்றது.]

**கணிவண்ணன் :** அண்ணா, 'உலகத்தொடு ஒட்ட ஒழுகல்' என்பது என்ன அண்ணா ?

**மணிவண்ணன் :** தம்பி, இது மேல் வகுப்பிலே தெரிந்து கொள்ளவேண்டிய செய்தி. இதைப் பற்றி உனக்கு ஆராய்ச்சி ஏன் ?

**கணி :** அப்படியா ? இது எங்கள் பாடத்திலே வருகிறதே ! நான் நித்தம் மனப்பாடம் செய்யும் திருக்குறளிலே கூட இந்தச் சொற்றொடர் வருகிறதே !

**மணி :** அந்தத் திருக்குறளைச் சொல் கேட்கலாம்.

**கணி :** "உலகத்தோ(டு) ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்."

**மணி :** தம்பி, நீ அதன் பொருளையும் சொல்லு வாயா ?

**கணி :** அண்ணா, நேற்று எங்கள் ஆசிரியர் அதைக் கூறினார் ஆனால், எனக்குச் சரியாக விளங்க வில்லை. அதனாலேதான் கேட்கிறேன்.

**மணி :** இந்தப் பாடலின் பொருளைத் தெரிந்து கொள்ள உன் போன்ற இளஞ்சிறுவர்கட்குச் சிறிது

துன்பமாகத்தான் இருக்கும். ஆனால், வள்ளுவர் இதை எல்லோரும் தெரிந்து கொள்ளவேண்டும் என்னும் எண்ணத்தாலே தான் ஒழுக்கம் என்னும் அதிகாரத்திலே இறுதிச் செய்யுளாக இதை அமைத்திருக்கின்றார். அது இருக்கட்டும், தம்பி, நீ உன் பாடங்களை யெல்லாம் நித்தம் படிக்கின்றாய் அல்லவா? எதற்காகப் படிக்கின்றாய்?

கணி: என்ன அண்ணா, இது தெரியாதா? மேல் வகுப்பு மாறுவதற்காகப் படிக்கின்றேன்.

மணி: அவ்வளவு தானா? அதற்குப் பிறகோ?

கணி: அதற்குப் பிறகு நானும் உங்களைப் போலப் பட்டம் பெற்று உத்தியோகமோ, வியாபாரமோ செய்து பொருள் தேடுவேன்.

மணி: தம்பி, நன்றாகச் சிந்தித்துச் சொல். பொருள் தேடுவதற்கு மட்டுந்தானா நாம் படிக்கின்றோம்?

கணி: இல்லை அண்ணா. இப்போது நினைவுக்கு வருகிறது. படித்தபடியே நடப்பது தான் முக்கியம், என்று எங்கள் ஆசிரியர் கூறியிருக்கின்றார்.

மணி: அதுதான் சரி. கண்ணா, நன்றாகப் படித்திருந்தும் படித்தபடியே நடக்காதவர்களை நாம் படித்தவர்கள் என்று சொல்லலாமா?

கணி: சொல்லக்கூடாது. அண்ணா, இப்போது எனக்கு அந்த திருக்குறளின் பொருள் சிறிது விளங்குகிறது. படித்தபடியே நடப்பவர்கள் அறிவாளிகள் அவ்விதம் நடக்காதவர்கள் எவ்வளவு படித்திருந்தாலும் படித்தவர்கள் அல்லர். நான் சொல்வது சரிதானே?

எங்கள் ஆசிரியரும் இப்படித் தான் கூறினர். ஆனல், 'உலகத்தொடு ஒட்ட ஒழுகல்' என்பது தான் சரியாக விளங்கவில்லை.

**மணி :** தம்பி, நீ நல்ல அறிவாளி ஆவாய் ; ஆதலால், இந்தப் பாடலின் கருத்தை உனக்கு முதலில் விளக்கிக் கூறிப் பிறகு பதப் பொருளும் கூறுகின்றேன்.

**கணி :** எங்கள் ஆசிரியரும், 'இந்தப் பாடலின் கருத்தை மட்டும் தெரிந்து கொள்ளுங்கள். அது போதும்' என்று தான் கூறுகின்றர்.

**மணி :** உண்மையே ; இந்தப் பாடலுக்குக் கொண்டு கூட்டிப் பொருள் கூறும் போது இளைஞர் கட்குச் சிறிது துன்பமாக இருக்கலாம். தம்பி, நான் கூறுவதைக் கவனி. நாம் படிப்பது 'ஏட்டுச் சுரைக் காயாக' இருத்தல் கூடாது.

**கணி :** ஏட்டுச் சுரைக்காய் என்பது என்ன அண்ணு ?

**மணி :** ஒரு புலவர் புராணப் பிரசங்கம் செய்து கொண்டிருந்தாராம். அப்போது அவர் சுரைக்காய் சாப்பிடுவது நல்லதன்று என்று அங்கிருந்தவர் களுக்குக் கூறினராம். இதை அந்தப் புலவரின் மனைவியும் கேட்டுக் கொண்டிருந்தாளாம். மறுநாள் புலவர் தம் மனைவியிடம், 'நம் தோட்டத்தில் காய்த் திருந்த சுரைக்காய்கள் எங்கே ?' என்ருராம். அவள், 'சுரைக்காய் சாப்பிடுதல் கூடாது என்று நீங்கள் பிரசங்கத்தில் கூறியதால், நான் அவைகளை அறுத்து ஏழைகட்குக் கொடுத்து விட்டேன் ; என்ருளாம்.

உடனே புலவர், 'அடி பைத்தியக்காரி, நான் சொல்லியது ஏட்டுச் சுரைக்காய்; இது வீட்டுச் சுரைக்காய் ஆயிற்றே!' என்ருராம்.

கணி சுரைக்காயில் இரண்டு வகையா!

மணி: வயிற்றுப் பிழைப்புக்காகச் சொன்னது ஏட்டுச் சுரைக்காய்; அதாவது, படித்தபடி நடக்காமல் மற்றவர்களுக்கு மட்டும் உபதேசம் செய்வது. நாம் நன்ருகப் படிக்க வேண்டும். நம்மைப் போலப் படித்தவர்கள் உலகத்தில் எவ்விதம் வாழ்கிருர்களோ, அவ்விதம் நாமும் ஒழுக்கத்தோடு வாழவேண்டும். அவ்விதம் வாழாதவர் படித்தும் படியாதவர், அதாவது கற்றறி மூடர்.

கணி: என்ன அண்ணு, படித்தவன் மூடனுக எவ்விதம் இருப்பான்? விளக்கிச் சொல்லுங்கள் அண்ணு!

மணி: தம்பி, அது ஒரு பெரிய கதை. என்ருலும், சுருக்கிச் சொல்லுகிறேன். ஓர் ஊரில் நான்கு வித்துவான்கள் இருந்தார்கள். மருத்துவப் புலவர், இசைப் புலவர், சோதிடப் புலவர், தருக்க சாத்திரி. இந்த நான்கு பேரும் ஓர் அரசனிடம் சென்று தம் புலமையைக் காட்டினராம். அப்போது அரசன் தனக்கு அருகில் உள்ள அமைச்சனைப் பார்த்து, 'இவர்களைக் குறித்து உமது கருத்து என்ன? என்று வினவிஞனும். உடனே அமைச்சன், 'எனக்கு ஒரு நாள் ஓய்வு கொடுங்கள்; சொல்லுகின்றேன். அது வரையில் அவர்கள் என்னிடம் இருக்கட்டும்' என்று கூறி அவ்விதமே அந்தப் புலவர் நால்வரையும் அமைச்சன் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்ருனும்.

கணி : அந்த அமைச்சன் இந்த நான்கு வித்துவான்களுக்கும் ஏதாவது பரீட்சை வைக்கப் போகிருனு ?

மணி : ஆம்; பரீட்சைதான் வைக்கப் போகிருன். இவர்கள் படித்திருக்கிருர்களே, இவர்களுக்கு உலக அறிவு இருக்கிறதா என்று பரீட்சிக்கப் போகிருனும்.

கணி : அது எப்படி அண்ணு ?

மணி : அமைச்சன் அந்த நான்கு வித்துவான் களையும் பார்த்து, 'புலவர்களே, இந்தப் பொன்னைப் பெற்றுக் கொள்ளுங்கள். வேண்டிய சாமான்களும் தருகின்றேன். வேறு எவர் உதவியையும் நாடாமல் நீங்களே காய்கறி முதலிய யாவும் வாங்கி நீங்களே சமையல் செய்து சாப்பிட வேண்டும். பிறகு என்னை வந்து பாருங்கள்'; என்று கூறினுனும். அந்தப் புலவர் நால்வரும் புத்தகமும் கையுமாய் இருந்தனரே ஒழியக் குடும்பக்கலை பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. அவர்கள் அரிசி விலை உப்பு விலை கூடத் தெரியாதவர் கள். என்ன செய்வார்கள் பாவம் !

கணி : அண்ணு, அண்ணு, இந்தக் கதை எனக் குத் தெரியும். மருத்துவப் புலவர், 'கத்திரிக்காய் சூடு செய்யும் ; வாழைக்காய் வாயு செய்யும் ! என்று எதை யும் வாங்காமல் சும்மா வந்துவிட்டார். தருக்க சாத்திரி யார் 'நெய்க்குத் தொன்னை ஆதாரமா, தொன்னைக்கு நெய் ஆதாரமா ?' என்று பார்க்க வாங்கிய நெய்யைக் கவிழ்த்து விட்டார். இன்னிசைப் புலவர் சோறு கொதிக்கும்போது, தாளம் சரியாக இல்லை என்று

சொல்லி அந்தச் சோற்றுப் பானையையே எட்டி உதைத்தாராம். அந்தக் கதை தானே இது ?

மணி : ஆம், தம்பி, அதுவே தான். அவர்கள், நன்ருகப் படித்திருந்தும், உலகத்தோடு ஒட்டி வாழத் தெரிந்து கொள்ளவில்லை. அதற்காகத் தான் இப்போது பாடங்களெல்லாம் குடும்பத்துக்கு ஏற்ற பாடமாக இருக்கவேண்டும் என்றும் மாணவர்கள் படித்த படியே நடக்க முயல வேண்டும் என்றும் அரசாங்கத்தார் கூறுகின்றனர்.

கணி : அண்ணு, நான் சாரண இயக்கத்தைச் சார்ந்தவன். எனக்குச் சமைக்கக் கூடத் தெரியும். நூல் நூற்பேன்; துணி நெய்வேன் ; பாய் முடைவேன். எங்கள் பள்ளியில் எல்லாம் கற்றுக் கொடுக்கிருர்கள்.

மணி : இவ்விதம் வாழ்க்கைக்கு வேண்டிய வகையில் பாடங்கள் இப்போது அமைந்திருப்பதற்குக் காந்தி அடிகளே அடிகோலினர். வார்தாக் கல்வித் திட்டம், ஆதாரக் கல்வி முறை என்றெல்லாம் இப்போது கூறுகின்ருர்களே, அவையாவும் மக்கள் வாழ்க்கைக்கு ஏற்ற முறைகளே யாகும்.

கணி : 'காந்தி அடிகள் சுய ஆட்சியை மட்டும் அளிக்கவில்லை; மக்கள் வாழ்க்கைக்கும் வழி வகுத்துக் காட்டியிருக்கின்ருர் ; என்று எங்கள் தலைமை ஆசிரியர் காந்தி விழாவில் மிகவும் விரிவாக ஆர்வத்தோடு பேசினர். அண்ணு, எனக்கு நேரம் போனதே தெரியவில்லை ! நாளைக்கு எங்கள் பள்ளியில் ஒரு கூட்டு வியாபாரம் நாங்களே நடத்தப் போகிருேம். அதற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் சேர்க்க உடனே ஒரு பட்டி தயார் செய்யவேண்டும். அது

இருக்கட்டும் அண்ணு, அந்தத் திருக்குறளுக்கு நீங்கள் பொருள் கூறவேயில்லையே !

**மணி :** தம்பி, அவ்விதமே கூறுகின்றேன். முதலில் அந்தப் பாட்டை அன்வயப்படுத்திக்கொள்ள வேண்டும்.

**கணி :** 'அன்வயம்' என்பது என்ன அண்ணு ?

**மணி :** சொற்களைக் கொண்டுகூட்டுதல், அதாவது பாட்டினை உரைநடையின்படி ஒழுங்கு படுத்திக் கொள்ளுதல் ; இதற்கு அன்வயப்படுத்துதல் என்பது பெயர்.

'உலகத்தொடு ஒட்ட ஒழுகல் கல்லார்,
பலகற்றும் அறிவிலாதார்'

இதுவே இந்தப் பாட்டின் அன்வயம் ஆகும்.

உலகத்தோடு – உலகத்தில் உள்ள உயர்ந்த மக்களோடு, ஒட்ட ஒழுகல் – சேர்ந்து ஒழுகுதலை, கல்லார் – தெரிந்து கொள்ளாதவர், பல கற்றும் – பல நூல்களைக் கற்றிருந்த போதிலும், அறிவிலாதார் - அறிவில்லாதவரே ஆவர்.

இங்கே உலகம் என்பது உலகத்தில் உள்ள பெரியோரைக் குறிக்கும். 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே,' என்பது வழக்கு.

**கணி :** நல்ல விளக்கம் தந்தீர்கள் அண்ணு ! நன்றி ! வணக்கம் !

**மணி :** தம்பி, நீயும் காந்தி அடிகளைப்போல ஒழுக்கத்திற் சிறந்தும், திருவள்ளுவரைப்போல அரிய நூல்கள் இயற்றியும், நம் குடும்ப மூதாதையர்களைப் போலக் கற்ற வண்ணம் ஒழுகியும் பேரும் புகழும் பெற்றுத் திகழ்வாயாக !

# ( 6 )

# முற்கால வாழ்க்கையும் தற்கால வாழ்க்கையும்

[சொற்போர்]

[அறிவழகன், திருமாவளவன், மணிவண்ணன், கலையரசி, செந்தாமரை என்ற ஐவரும் கல்லூரியிலும் உயர்நிலைப் பள்ளிகளிலும் கல்வி கற்கும் மாணவர்கள் ஆவர். அவர்கள் தம் ஓய்வு நேரத்தை நன்முறையில் பயன்படுத்தத் தங்களுக்குள் ஒரு கழகத்தை ஏற்படுத்திக் கொண்டனர். அதற்கு 'ஐம்பெருங்குழு' என்பது பெயர். அறிவழகன் அக்குழுவின் தலைவன். திருமாவளவன் செயலாளன். அவர்கள் ஒவ்வொரு ஞாயிறும் கூடிப் பல பொருள் பற்றிப் பேசியும் சொற்போர் புரிந்தும் தம் சொல்வன்மையை வளர்த்து வந்தனர். அவ்வாறு ஒரு ஞாயிறு மாலை அவர்கள் 'முற்கால வாழ்க்கை, தற்கால வாழ்க்கை இவற்றில் எது சிறந்தது ?' என்பது குறித்துச் சொற்போர் புரியத் தொடங்கினர். அறிவழகன் தலைமை வகித்துத் தன் முன்னுரையைத் தொடங்கினன்.]

**தலைவர் :** ஐம்பெருங்குழு உறுப்பினர்களே ! வணக்கம். சென்றவாரம் எனக்கு உடல்நலம் இன்மையால் என்னால் கூட்டத்தில் கலந்து கொள்ள இயலவில்லை. கலையரசியார் தலைமை ஏற்றுக் கூட்டத்தை

மிகவும் திறமையாக நடத்தி இருப்பதைச் செயலாளர் படித்த நிகழ்ச்சிக் குறிப்பினுல் அறிந்து மகிழ்ந்தேன். இந்த வாரம் நீங்கள் பேச எடுத்துக் கொண்டிருக்கும் பொருள் மிகவும் சிறந்ததாகும். நீங்கள் பேசத் தொடங்கும்முன், முற்காலம், தற்காலம் இவற்றைப் பற்றி ஒரு வரையறை செய்துகொள்ள வேண்டும். தற்காலம் என்பதற்குக் குறிப்பிட்ட காலம் என்பதே பொருள். அதனினும் இக்காலம் என்று கொண்டால் தெளிவாக இருக்கும் என்பது என் கருத்து. முற்காலம் என்பது எது? நமக்கு முன்னர் நடந்த நிகழ்ச்சிகள் யாவும் முற்கால நிகழ்ச்சிகளே எனினும் முற்காலம் என்பது நம் வழக்கில் சங்க காலத்தையே குறிப்பாக உணர்த்தி வருகின்றது. ஆகவே 'சங்ககாலப் பழந் தமிழர் வாழ்க்கை நெறி சிறந்ததா? இக்கால வாழ்க்கை நெறி சிறந்ததா?' என்ற பொருளையே இன்றைய வாதத்திற்குத் தலைப்பாகக் கொண்டு கலையரசியாரை முதலில் பேசும்படி அழைக்கின்றேன்.

கலையரசி: அறிவிற் சிறந்த தலைவர் அவர்களே! நண்பர்களே! அனைவர்க்கும் என் பணிவார்ந்த வணக்கம். நான் நம் முற்கால வரலாற்றையும் இக் கால வரலாற்றையும் விரிவாக எடுத்துக் கூறி உங்கள் பொன்னான நேரத்தை வீணாக்க விரும்பவில்லை. எடுத்துக் கொண்ட பொருள் பற்றிச் சில கருத்துக்களை மட்டும் உரைத்து என் கொள்கையை வற்புறுத்த விரும்புகின்றேன். வாழ்க்கை என்றால் என்ன? உயிர் உடலோடு கூடி வாழ்வதே வாழ்க்கை என்பது அனைவரும் அறிந்ததே. சிறந்த வாழ்க்கை எது? உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லா வசதிகளையும்

பெற்றுத் துன்பம் இன்றி நீண்ட காலம் இன்பமாக வாழும் வாழ்க்கையே சிறந்த வாழ்க்கையாகும். அவ்விதம் வாழ்வதற்குத் திருவள்ளுவர் தெளிவான ஒரு வழி வகுத்துரைத்துள்ளார்.

"பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல்"

என்பதே அவர் கூறும் வழி. பிறர் நம்மைப் பழிக்காத வகையில் வாழ்தல், நம்மிடம் இருப்பதைப் பலருக்கும் உதவி வாழ்தல் ஆகிய இந்த இரண்டையும் நம் கடமையாகக் கொண்டால் நம் வாழ்க்கை நெறி ஒழுங்காகச் செல்லும் ; நாமும் நிலமிசை நீடு வாழலாம் என்பதே அவர் கருத்து. இவ்விதம் வாழ்வதற்கு முற்கால வாழ்க்கை நெறியே உதவுகிறது என்பது என் எண்ணம்.

சங்க கால மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்தார்கள். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் பாலை என்ற ஐவகை நிலங்களிலும் வாழ்ந்த அவர்கள் ஆங்காங்கு இயற்கையாய்க் கிடைத்த பொருள்களைக் கொண்டு ஆடம்பரம் இன்றி எளிய வாழ்வு வாழ்ந்தனர். அவர்கள் உணவும், உடையும் இயற்கையோடு பொருந்தியனவாய் இருந்தன. பழக்க வழக்கங்களும் இயற்கைக்கு ஏற்றனவாகவே அமைந்தன. அதனால் அவர்கள் வாழ்வில் அமைதி நிலவியது ; இன்பம் பொங்கியது. செயற்கையான ஆடம்பர வாழ்வு வாழும் இக்காலத்தில் அத்தகைய அமைதிக்கும் இன்பத்திற்கும் இடம் இருக்கின்றதா ?

இரண்டாவதாக இயற்கையோடு பொருந்திய வாழ்வு வாழ்ந்ததால் முற்கால மக்கள் பாடுபட்டு

உழைத்துத் தம் தேவைக்குரிய பொருளைப் பெற வாய்ப்பு இருந்தது. உழைப்புக்கு ஏற்ற வருவாய்; தேவைக்கு ஏற்ற வசதி அனைவருக்கும் கிடைத்தன. வேலையில்லாத்திண்டாட்டம் என்பதே அக்கால மக்கள் அறியாததாகும். ஆனால் இக்கால நிலை என்ன? வேலையில்லாத் திண்டாட்டமும் பஞ்சமும் பசியும் மக்களை வாட்டி வதைத்தலை அறியாதார் யாவர்?

அடுத்ததாக முற்கால மக்களிடம் சிறந்த ஒழுக்கமும் உண்மையும் நிரம்பி இருந்தன. பிறரை வஞ்சித்து வாழ்வதைப் பெருங்குற்றமாக அவர்கள் நினைத்தனர்; தமக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் வாழ்க்கையே உயர்ந்த வாழ்க்கை என்று எண்ணினர். பிறர்க்கு உதவுவதால் கேடு வரும் எனின் அக்கேட்டினைத் தன்னை விற்றாயினும் கொள்ளவேண்டும் என்பதே அவர்கள் குறிக்கோள்.

"ஒப்புரவினால் வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து"

என்பதன்றோ வள்ளுவர் வாக்கு? இத்தகைய மக்கள் வாழ்வில் பொறாமைக்கோ பூசலுக்கோ இடம் இருந்திருக்குமா? இனவேறுபாடு, குல வேறுபாடு, மதவேறுபாடு என்ற உணர்ச்சிக்குத் தான் இடம் இருந்திருக்குமா?

ஆதலால் அக்கால மக்கள் வாழ்க்கையில் ஒற்றுமை நிலவியது; உயர்வு பெருகியது எனவே "நாடெங்கும் வாழக்கேடொன்றும் இல்லை" என்ற கொள்கையுடன் உயரிய வாழ்வு வாழ்ந்த முற்கால மக்கள் வாழ்வே சிறந்தது என்று நான் வற்புறுத்த விரும்புகின்றேன்.

தலைவர் : நண்பர்களே ! அடுத்து இதனை மறுத்துப் பேச விரும்புவோர் தம் கருத்தினை விளக்கிக் கூறுமாறு அழைக்கின்றேன்.

திருமாவளவன் : பேரன்பு மிக்க தலைவர் அவர்களே ! தோழர்களே ! மனிதன் சந்திர மண்டலத்திற்குப் பறந்து செல்ல முயன்று கொண்டிருக்கும் இந்த விஞ்ஞான காலத்திலே கற்றுணர்ந்த கலையரசியார் முற்கால மக்களின் வாழ்க்கை முறையே சிறந்தது எனப் பேசியது விந்தையே.

பிறர் நம்மைப் பழிக்கும் படியாக வாழ்தல் கூடாது ; நம்மிடம் உள்ளதைப் பிறர்க்கும் பகுத்துண்டு வாழ வேண்டும் என்று வள்ளுவர் கூறியதை நானும் முழு மனத்தோடு ஒத்துக் கொள்கின்றேன். ஆனால் மன்னன் ஒருவனே எல்லோரையும் அடக்கி ஆண்டு வந்த அக்காலத்தில் உழைப்பவர்க்கு உரிமை இருந்திருக்குமா ? உழைப்பவர் சிலர் ; உண்டு வாழ்வோர் பலர் என்ற நிலைதானே இருந்திருக்க முடியும் ? ஆனால் இன்றோ அந்நிலை மாறி 'மக்களே இந்நாட்டு மன்னர்' என்ற முறை தோன்றி உள்ளது. உழைப்பவர்க்கு உரிமை பெருகியுள்ளது ! உண்மையாக நோக்கினால் வள்ளுவர் கூறிய பகுத்துண்டு வாழும் முறை இக்காலத்தில் தான் நடைமுறையில் உள்ளது என்பது விளங்கும்.

மற்றும் இயற்கையோடு இயைந்த வாழ்வு என்று சொல்லி விட்டால் போதுமா ? எது இயற்கை, எது செயற்கை ? என்று சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். ஆதிகால மனிதன் காய்கனிகளையும் பச்சை இறைச்சியையும் உண்டு வாழ்ந்தான். பின்னர், தன் அறிவு

வளர்ச்சியால் அவன் சமைத்துண்ணத் தெரிந்து கொண்டான் ; உழுது உணவுப் பொருள்களை விளை விக்கக் கற்றுக் கொண்டான். மரத்தில் உறங்கிய மனி தன் வீடுகட்டி வாழத்தொடங்கினன். தழைகளையே உடையாக அணிந்து வாழ்ந்தவன் அழகிய ஆடை அணிகளை அணியக் கற்றுக்கொண்டான். இவை யாவும் செயற்கையல்லவா ? என்றாலும் அந்த நாகரிகங்கள் யாவும் மக்களின் அறிவு வளர்ச்சிக்கு ஏற்பத்தோன்றிய வாழ்க்கை வசதிகள் அல்லவோ ? அவை போலவே இன்று மின்விசை முதல் அணுசக்திவிசை வரை தோன்றியுள்ள யாவும் மக்களின் அறிவினல் ஏற்பட்ட வசதிகளேயாம். இவற்றைச் செயற்கை என்று புறக் கணிப்பது அறிவுடைமையாகுமா ? பண்டைக்காலத் தில் வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை என்று குறிப் பிட்டார். இஃது அடிப்படை உண்மையை மறந்தோ மறைத்தோ பேசுவதாகும். பண்டைக் காலத்தில், மக்கள் தொகை மிக மிகக் குறைவு ; அவர்கள் தேவை யும் குறைவு. தேவைக்கு மேல் உற்பத்தி அதிகமாக இருந்தது. அதனல் மக்களிடம் வேலையில்லாத் திண் டாட்டமோ, பஞ்சமோ, பசிப்பிணியோ நேர வாய்ப்பு இல்லை. ஆனல் இக்கால நிலை என்ன ? ஒவ்வோ ராண்டும் மக்கள் தொகை கோடிக் கணக்கில் பெருகி வருகின்றது. அதனல் வாழ்க்கை வசதிகள் குறைவதும், வேலையில்லாத் திண்டாட்டம் நேர்வதும் இயற்கையே. எனினும் இக்கால அறிஞர்கள் தம் அறிவாற்றலால் அத்தகைய அவலநிலை ஏற்படாமல் கண்காணித்து வருவதை எண்ணி நாம் மகிழ வேண்டியிருக்கக் குறை கூறுவது பொருந்தாது.

இனி, நான் இக்கால வாழ்வே சிறந்தது என்ற என் கொள்கையை விளக்கிச் சில கூற விரும்புகின்றேன். இன்று மனிதன் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற ஐம்பெரும் பூதங்களையும் அடக்கியாளும் வல்லமை படைத்திருக்கின்றான். முற்கால மக்களைவிட அறிவிலும் ஆற்றலிலும் பன்மடங்கு உயர்ந்துள்ளான். முற்கால மக்கள் மூட நம்பிக்கை உடையவர்களாய் எல்லாம் விதியின் செயல்; விதியை வெல்ல யாரால் ஆகும் என்று கூறிக்கொண்டு தம் முயற்சியற்று வாழ்ந்தனர். இக்கால மக்கள் தம் சக்தியின் ஆற்றலை உணர்ந்துள்ளனர். அதனால் அவர்கள் இவ்வுலகில் இன்பமாக வாழத் தக்க பற்பல வசதிகளையும் கண்டறிந்துள்ளனர்; மனித உழைப்பைக் குறைத்து அவர்கள் இன்ப வாழ்வைப் பெருக்கியுள்ளனர்.

அக்காலத்தில் மனிதன் மாடுபோல் வயலில் உழைத்தான். இக்காலத்திலோ உழவும் விதைக்கவும் அறுவடை செய்யவும் விதம் விதமான கருவிகள் உள்ளன. அக்கால மனிதன் போக்கு வரவு வசதியில்லாமல் கிணற்றுத் தவளையாய் நாட்டுவளம் அறியாமல் வாழ்ந்தான். இக்காலத்தில் ஒரே நாளில் ஒரு கண்டத்திலிருந்து மற்றொரு கண்டத்திற்குப் பறந்து செல்ல வசதி ஏற்பட்டுள்ளது. அதனால் இன்று, 'உலகமே ஒரு குடும்பம்' என்ற உயரிய பண்பாடு வளர்ந்து வருகின்றது. மற்றும் வானொலி, தொலைபேசி, தொலைக்காட்சி, படக்காட்சி என விஞ்ஞானத்தால் இன்று விளைந்துள்ள புதுமைகள், வசதிகள் எண்ணிலடங்காதனவாகும். மருத்துவத்துறையில் இக்காலத்தில் ஏற்பட்டுள்ள புதுமைகளைப் பழங்கால மக்கள் எண்ணியாவது பார்த்

திருக்க முடியுமா? இருதயத்தையும் அறுவைச் சிகிச்சை மூலம் நோய் நீக்கிக் குணப்படுத்த முடியும் என்று இக் கால விஞ்ஞானிகள் விளக்கிக் காட்டியுள்ளனர். அவர்கள் இத்துறையில் செய்து வரும் மற்றும் பல முயற்சிகள் வெற்றி பெற்றால் மக்கள் கலையரசியார் கூறியது போல் நீண்டகாலம் இன்பமாக வாழ முடியும் என்பது என் நம்பிக்கை. ஆதலால் இக்காலம், மனித வாழ்விலேயே மிக உயர்ந்த பொற்காலம் என்று கூறி என் உரையை முடிக்கின்றேன்.

தலைவர் : நண்பர்களே! இருவர் தம் உரைகளையும் கேட்டீர்கள். உங்களில் யாராவது அவர்கள் கூறிய கருத்துக்களை ஒட்டியோ வெட்டியோ பேச விரும்பினால் பேசுமாறு அழைக்கின்றேன்.

மணிவண்ணன் : பேரன்புடையவர்களே! வணக்கம் மிகப் பல. நண்பர் திருமாவளவன் விஞ்ஞானப் பித்தினால் பழமையை எள்ளி உரைத்துப் புதுமையை வரவேற்றுப் பேசினார் ; இக்கால வாழ்க்கையே சிறந்தது என்பதற்கு விஞ்ஞானத்தினால் ஏற்பட்டுள்ள வசதிகளை அடுக்கிக் காட்டினாரேயன்றி மக்கள் வாழ்க்கை இக்காலத்தில் அமைதியும் இன்பமும் உடையதாக இருக்கின்றதா என்று எடுத்து விளக்கத் தவறி விட்டார்.

இயற்கை செயற்கை என்பதற்கு அவர் கூறிய விளக்கமும் நகைப்பையே விளைவிக்கிறது. நம் நாட்டில் உள்ளவர்கள் அரிசியை உணவாக உண்டு, நம் நாட்டின் தட்ப வெப்ப நிலைக்கு ஏற்பப் பருத்தி ஆடை உடுத்து வாழ்தல் இயற்கையோடு இயைந்த வாழ்வாகும். அயல்நாட்டு உணவு, உடை இவைகளை மேற்கொள்வது ஆடம்பரத்துக்காகவே அல்லாமல்

இயற்கையாகுமா? பண்டைக் கால மக்கள் இயற்கையோடு ஒட்டிய எளிய வாழ்வு வாழ்ந்தமையாலேயே இன்புற்று வாழ்ந்தனர். காந்தியடிகளாரும், "நம் நாட்டுக்கு ஏற்ற எளிய வாழ்வே வறுமையை நீக்கும்" என்று கூறியதை நினைவுபடுத்த விரும்புகின்றேன்.

பண்டைக்கால மன்னர்களைக் குறை கூறி மக்களாட்சி நடைபெறும் இக்காலத்தில் தான் பகுத்துண்டு வாழும் அறம் சிறந்த முறையில் நடைபெறுகிறது என்று என் நண்பர் கூறினார். பகுத்துண்டு வாழ்தல் என்றால் என்ன? யானை, எருது, பூனை, எறும்பு என்ற யாவற்றுக்கும் ஒரே அளவில் உணவுப் பொருளைப் பங்கிட்டுத் தருவது பகுத்துண்டு வாழ்வதாகுமா? தேவைக்கு ஏற்ப உணவும் உடையும் பிறவும் கிடைக்கச் செய்வதே பகுத்துண்டு வாழ்வதாகும். அத்தகைய முறை இப்போது உள்ளது என்று நண்பர் கூறுவாரா? எத்தனை குடும்பங்கள் இன்று உணவுப் பற்றாக்குறையாலும் ஏனைய வசதிக் குறைவுகளாலும் துன்பம் உறுகின்றன என்பது உங்கட்கு நன்றாகத் தெரியும்.

பண்டைக்கால மன்னர்கள் தலைவராக இருந்து ஆண்டாலும் அவர்கள் நாட்டின் நலம் ஒன்றையே கருத்தில் கொண்டு வாழ்ந்தனர்; தங்களையும் குடிமக்களில் ஒருவராகவே கருதினர். மேலும் கூறுவேன். தற்போதுள்ள மக்களாட்சி முறைக்கு வழிவகுத்தவர்கள் அவர்களே. பண்டைக் காலத்தில் ஒவ்வொரு கிராமமும் ஒரு சுதந்திரக் குடியரசாய் விளங்கியது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரியோர்களே கிராம ஆட்சியை நடத்தினர். அதனால் கிராமத்தில் கட்டுப்பாடும், கடமை உணர்ச்சியும் நிரம்பி இருந்தன.

இன்றைய மக்களாட்சியில்கூட அத்தகைய கிராமங்களைக் காண இயலவில்லையே.

என் நண்பர் இக்காலத்தில் உள்ள விஞ்ஞானப் புதுமைகளை வியந்து பாராட்டினார். இவையெல்லாம் முற்காலத்தில் உண்டா? என்றார். இல்லை என்பதை ஒத்துக் கொள்கின்றேன். இவை எல்லாம் இருந்து என்ன பயன்? இக்கால மக்களிடம் பண்டைக் கால மக்களிடம் இருந்த மனிதப் பண்பு இல்லையே! இன்று ஏற்பட்டுள்ள இவ்விஞ்ஞானப் புதுமைகள் எல்லாம் மனிதர்களைச் சோம்பேறிகளாக்கவும், உலகத்தை அழிக்கவும், அஞ்சி நடுங்க வைக்கவும், 'தடி எடுத்தவன் தண்டல்காரன்' என்னும் நிலையை வளர்க்கவும் தாமே பயன்படுகின்றன. இவற்றால் நாட்டில் இன்பமோ அமைதியோ ஏற்பட்டனவா? மக்கள் படும் துன்பங்கள் குறைந்தனவா? போரும் பிணக்கும் பேராசையும் பொறாமையும் நிறைந்துள்ள இக்காலத்திலும் நம் நாட்டில் வாழ்ந்த புத்தர், திருவள்ளுவர், அசோகர் போன்ற சான்றோர்கள் வகுத்த அன்பு நெறியே இவ்வுலகைக் காப்பாற்றக் கூடியதாய் உள்ளது. நம் தலைவர் பண்டித நேரு கூறும் பஞ்சசீலம் என்பது அப்பழம் பெருங் கொள்கை தானே! ஆதலால் இக்கால மக்களின் இன்ப வாழ்வுக்கு வழிகாட்டியாக உள்ள பழங்கால வாழ்க்கை முறையே சிறந்தது என்பதனை அனைவரும் ஏற்றுக் கொள்வர் என நம்புகின்றேன்.

செந்தாமரை: அறிவு சான்ற தலைவர் அவர்களே! அன்பர்களே! வணக்கம். முற்கால வாழ்க்கையைப் பாராட்டிப் பேசியவர்கள் இக்காலத்தில் கண்டு

பிடிக்கப்பட்டுள்ள விஞ்ஞானப் புதுமைகள் எல்லாம் மக்கள் வாழ்க்கையை வளப்படுத்த உதவவில்லை; போர் வெறியைத் தூண்டி நாசம் விளைவிக்கவே உதவுகின்றன என்று கூறினர். இஃது ஓர் அளவுதான் உண்மை. துப்பாக்கியும், பீரங்கியும், அணுகுண்டும் போருக்கு உதவுகின்றன என்பது உண்மையே. இதனாலேயே இக்கால வாழ்க்கை பயனற்றது என்று கூறி விடலாமா? இவர்கள் போற்றிப் புகழ்ந்த சங்க காலத்தில் போர்கள் நடைபெறவில்லையா? சேர, சோழ, பாண்டிய வேந்தர்கள் ஒற்றுமை இன்றிப் போர் புரிந்த செய்தியை விளக்கப் புறநானூறு ஒன்று போதுமே. அக்கால அறிவு வளர்ச்சிக்கு ஏற்ப அவர்கள் கண்டு பிடித்திருந்த வில்லும் அம்பும் வேலும், வாளும் ஆயுதங்களாகப் பயன்பட்டன. பகைவர் நாட்டைக் கைப்பற்றி இடித்துத் தரைமட்டமாக்கி, நெருப்பூட்டி அழித்து நாசம் செய்த கதை அக்காலத்தும் நிகழ்ந்தே உள்ளது. அதே நிலைதான் இன்றும் உள்ளது. இக்கால அறிவு வளர்ச்சியினால் கண்டு பிடிக்கப்பட்ட வியத்தகு ஆயுதங்கள் போரில் பயன் படுத்தப்படுகின்றன. அஃது எங்ஙனம் தவறாகும்?

இதனால் நான் போரை ஆதரிப்பதாகக் கருதி விடாதீர்கள். அஃது எந்தக் காலத்திலும் இயற்கை என்பதே நான் கூறக் கருதியது. ஆனால் நாகரிகம் மிக்க இக்காலத்தில் அத்தகைய போர் முறைகளை ஒழித்து உலகம் முழுவதும் ஒரு குடும்பமாக வாழ வழி காணத் தலைவர்கள் உழைத்து வருகின்றனர். ஐக்கிய நாடுகள் சபை அதற்காகப் பாடுபட்டு வருவதை அனைவரும் அறிவோம். மனிதப் பண்பின் உயர்ந்த

சின்னமாக விளங்குகின்றது அச்சபை. அங்ஙனம் இருக்க இக்கால மக்களிடம் மனிதப் பண்பாடு இல்லை என்று கூறியதற்காக நான் மிகவும் வருந்துகின்றேன்.

இறுதியாக ஒன்று கூறி முடிக்கின்றேன். பழங் கால வாழ்க்கை முறையைப் போற்றிப் புகழ்ந்த இவர் கள் பழங்கால முறைப்படி உண்டு உடுத்தி வாழ முன் வருவார்களா? என்று கேட்க விரும்புகின்றேன். மக்கள் அறிவு வளர்ச்சி இல்லாமல் வாழ்ந்த காலத்தில் தங்கள் தேவைக்கு ஏற்ற எளிய பொருள்களைக் கொண்டு வாழ்ந்தார்கள் என்றால் அறிவு வளர்ச்சி பெற்றுப் பற்பல வசதிகளும் பெருகியுள்ள இக்காலத் தில் அப்பழங்கால வாழ்வு தான் சிறந்தது என்று கூறு வது அறிவுடைமையாமோ? அந்தப் பழங்கால வாழ்க் கையே இன்ப வாழ்க்கையாக இருந்தால் மக்கள் ஏன் அதை விட்டுப் புதுப்புது நாகரிக நிலையை விரும்பி ஏற்றார்கள்? நம் கலையரசியார் கொள்கையைக் கண்டிக்க இந்த ஒன்றே போதும் என்று சொல்லி என் பேச்சை முடித்துக் கொள்கின்றேன்.

**தலைவர் :** அறிவு நலம் சிறந்தொளிரும் நண்பர் களே! உங்கள் அரிய சொற்பொழிவுகளைக் கேட்டுப் பெரு மகிழ்வு கொள்கின்றேன். ஒவ்வொருவரும் உங் கள் எண்ணத்தை நிலைநாட்டக் கூடிய கருத்துக்களை எடுத்துரைத்தீர்கள். முடிவு கூறவேண்டிய பொறுப்பு என்னைச் சார்ந்துள்ளது. உங்கள் சொற்பொழிவுகளைக் கேட்ட எனக்கு இருவித வாழ்க்கை முறைகளும் சிறந் தன என்றே தோன்றுகின்றன. பழமை இல்லாமல் புதுமை இல்லை. இன்றைய புதுமைகள் யாவும் பழமையிலிருந்து தோன்றி வளர்ந்தனவேயாம்.

நீரிலே இயற்கையாய்த் தோன்றிய புழுவிலிருந்தே உயிர் வகைகள் ஒன்றிலிருந்து ஒன்ருகத் தோன்றி வளர்ந்தன. இறுதியாக மனிதன் தோன்றினன். மனிதர்களின் தோற்றத்திலும் பழக்க வழக்கங்களிலும் கூடக் காலப் போக்கிற்கு ஏற்ப எத்தனையோ வேறுபாடுகள் தோன்றிக் கொண்டிருக்கின்றன. அவை போலவே நாகரிகமும் ஒன்றிலிருந்து ஒன்ருகத் தோன்றி வளர்ந்து பெருகிய வண்ணமே உள்ளது. இதனைத் தான் விஞ்ஞானிகள் 'கூர்தல் அறம்' (Law of Evolution) என்று கூறுகின்றனர். உலகில் நிகழும் யாவும் கடவுளின் அருளாகிய இந்த இயற்கை நியதியை ஒட்டியே நிகழ்ந்து வருகின்றன. இவ்வுண்மையை உணர்ந்து கொண்டால் நாம் புதுமையைப் போற்றிப் பழமையை வெறுக்கவோ, பழமையைப் பாராட்டிப் புதுமையைப் புறக்கணிக்கவோ செய்ய மாட்டோம்.

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையினனே."

என்று பவணந்தியார் மொழி இலக்கணத்திற்குக் கூறிய விதி இதற்கும் பொருந்தும் என்று கூற விரும்புகின்றேன்.

பழங்கால மக்களும் அக்காலச் சூழ்நிலைக்கு ஏற்பத் தம் அறிவு ஆற்றல்களால் புதுப்புதுக் கருவிகளையும் வாழ்க்கை வசதிகளையும் கண்டு பிடித்துப் பயன் படுத்தியே வாழ்ந்தனர். அக்காலத் தேவைகளுக்கு அவை போதுமானவைகளாய் இருந்தன. மனித அறிவு வளர்ச்சியால் நாகரிகம் வளர்ந்துள்ளது.

அவனுடைய தேவைகளும் பெருகியுள்ளன. வாழ்க்கை முறைகளும் மாறியுள்ளன அவற்றிற்கு ஏற்ப இக் காலத்தில் புதுப் புதுக் கருவிகளும் வசதிகளும் ஏற் பட்ட வண்ணமாக உள்ளன. பழமையைப் போற்றி இவ்வசதிகளை வெறுத்தல் கூடாது.

எனவே, இக்காலத்தில் ஏற்பட்டுள்ள எல்லா விதமான வசதிகளையும் நாம் பயன்படுத்த வேண்டும். நம்முடைய அறிவால் இன்னும் பற்பல வசதிகளையும் கண்டறியப் பாடுபடவும் வேண்டும். அதுவே இயற்கை நெறி.

"உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்."

என்ற வள்ளுவர் வாய்மொழியை உங்கட்கு நினைவூட்ட விரும்புகின்றேன்.

புதுமையைப் போற்றும் அதே சமயத்தில் பழங் கால மக்கள் தன்னலம் இன்றிப் பிறர் நலம் கருதி வாழ்ந்தது போலவும், அன்பையும் அருளையும் போற்றி வாய்மை வழி ஒழுகிச் சான்றாண்மையுடையவராய்த் திகழ்ந்தது போலவும் நாம் வாழ முற்பட வேண்டும். புதிது புதிதாகத் தோன்றும் விஞ்ஞான வளர்ச்சிகள் யாவும் உலகத்தின் அழிவுக்குப் பயன்படாமல் ஆக்கத்திற்கு – இன்ப வாழ்விற்கு – அமைதிக்கு உதவ வேண்டும். இங்ஙனம் முற்கால வாழ்விலும் இக்கால வாழ்விலும் சிறப்புடையனவற்றை அறிந்து கடைப் பிடித்து வாழ்வதே உண்மையான நாகரிக வாழ்வா கும். உங்கள் கருத்துக்களை நேர்மையோடு எடுத்துக்

கூறி வாதிட்ட திறமையைப் பாராட்டுகின்றேன். வணக்கம்.

**திருமாவளவன் :** நண்பர்களே ! தலைவர் அறிவழகன் அவர்கள் தம் பெயருக்கு ஏற்பக் காய்தல் உவத்தல் இன்றி நடு நிலையோடு நாம் கூறிய உரைகளைக் கேட்டு நல்ல தீர்ப்பு வழங்கியதற்காக நம் குழுவின் சார்பில் அவருக்கு நன்றியும் வணக்கமும் தெரிவிக்கிறேன். சிறந்த முறையில் சொற்போர் புரிந்த உங்கள் அனைவருக்கும் என் நன்றியும் வணக்கமும் உரியனவாகும்.

(7)

# நமச்சிவாய முதலியாரும் நாமும்

தமிழுக்காகவும் தமிழ் நாட்டுக்காகவும் உழைத்த பெரியவர்கள் நம் நாட்டிலே இருந்திருக்கின்றனர். அவர்களையும் அவர்களுடைய தொண்டுகளையும் நம்மவர்கள் நினைத்துப் பார்ப்பதே இல்லை என்று சொல்லுதல் வேண்டும். அத்தகைய பெரிய அறிவாளிகளில் பேராசிரியர் காவேரிப்பாக்கம் நமச்சிவாய முதலியார் அவர்களும் ஒருவராவர்.

இப்போதுள்ள புலவர்கட்கும் எழுத்தாளர்களுக்கும் அவரை ஒரு வழிகாட்டியாகவே கூறலாம். ஒரு காலத்திலே மாணவர்கள் எல்லோரும் அவருடைய உரை நடையையே பின்பற்றிப் பெரிதும் நன்மை அடைந்தனர். அவர் தமிழ்ப் புலவர்களோடு கூடிப் பேசி மகிழ்வார்; அந்தக் காலத்துத் தமிழ் புலவர்களின் வழக்கத்தினை ஒட்டியே அவர்களோடு பேசிப்பழகுவார்; ஆங்கிலத்திலே வல்லவர்களோடு பழகும்போதும் அவர்களோடு சரிசமானமாக இருந்து அவர்களெல்லாம் அதிசயிக்கும்படியாக சிறந்த கருத்துக்களையெல்லாம் அவர்கட்கு விளக்கிச் சொல்லுவார். ஆரம்பப் பள்ளி முதல் கல்லூரி வரையில் உள்ள மாணவர்கட்கும் மாணவியர்கட்கும் பாடம் கற்பித்தும் புதுமுறையில்

பாடப் புத்தகங்கள் எழுதியும் பேரும் புகழும் பெற்றவர் நம் நமச்சிவாய முதலியார். டாக்டர் ஜான்சன் அவர்கட்கு உடனிருந்து அவருடைய திறமைகளை யெல்லாம் பாஸ்வெல் அவர்கள் குறித்து வைத்தது போன்று இவருடைய அரிய கருத்துக்களை யெல்லாம் எவரும் குறித்து வைக்காமல் போய்விட்டனர். எனக்குத் தெரிந்த அளவிலே அவருடைய அன்பின் அருமையினையும் கல்வித் திறனையும் நுண் அறிவினையும், உதவுங் குணத்தினையும், முயற்சியால் முன்னுக்கு வந்த வரலாற்றையும் எழுதுவேனேயானால் அதுவே ஒரு பெரிய நூலாக ஆகிவிடும். என்னைப் போன்று அவருடன் நெருங்கிப் பழகிய பேரறிஞர்கள் நம் நாட்டிலே இன்றும் இரண்டொருவர் இருந்தே வருகின்றனர்.

இங்கே நான் எல்லாவற்றையும் விரிவாகக் கூருமல் இரண்டொன்றை மட்டும் சுருக்கமாகக் கூறலாம் என்று எண்ணுகின்றேன். நமது முதலியார் அவர்கள் கடற்கரை ஓரத்திலே கட்டிய இரண்டு மாளிகைகளையும் கூர்ந்து கவனித்தாலே அவருடைய நுண்மையான அறிவு எவருக்கும் எளிதில் புலப்படும். மழைக் காலத்துக்கு ஏற்ற வகையிலும் வெயிற் காலத்துக்கு வசதியாகவும் அந்த இரண்டு மாளிகைகளையும் தமக்கு ஏற்ற வகையிலே அவர் கட்டி முடித்ததை அறிஞர் பலரும் அந்தக் காலத்திலேயே புகழ்ந்து பாராட்டி இருக்கின்றனர். நம் தமிழ் நாட்டிலே உள்ள அரிய செடிகளையும் மரங்களையும் கொடி வகைகளையும் அரும்பாடுபட்டுத் தொகுத்துத் தம்முடைய தோட்டத்திலே அவைகளைக் காப்பாற்றி வந்திருக்கின்றார். தாவர நூல் அறிஞர்கள் எல்லாம் அந்தச் செடி கொடி வகைகளை

நேரில் கண்டு பெரிதும் பயனடைந்திருக்கின்றார்கள். இப்போதுள்ள புலவர்கள் எல்லாம் வித்துவான் பட்டம் பெற்று நல்ல ஊதியத்தையும் அடைந்து வருவதற்கு அவர் எடுத்துக்கொண்ட முயற்சியை அறிஞர் பலரும் நன்கு அறிவர். சுருக்கமாகக் கூறினால் அவர் ஒரு சீர்திருத்தக்காரர் ; முருகப் பெருமானிடத்திலே பேரன்புகொண்டவர் ; புதுமுறைக் கல்விக்கு வேண்டியவைகளை எல்லாம் வாங்கிப் படித்து அந்தப் புது முறையைப் பரப்புவதற்குக் காரணமாக இருந்தவர் ; குருபக்திமிகுந்தவர் ; நன்றியறிதல் உடையவர் ; ஒரு சிறந்த அறிவாளி ; பொறுமைக்கே ஓர் இருப்பிடமானவர் ; பெருந்தன்மை வாய்ந்தவர். இன்னும் எவ்வளவோ சொல்லலாம்.

நான் முதலில் அவரைக் கண்டு பயனடைந்த அந்த ஒரு நிகழ்ச்சியைமட்டும் தெரிவித்தாலே போதுமென்று எண்ணுகின்றேன். நான் சொல்லப்போகும் செய்தி ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகட்குமுன் நிகழ்ந்தது. என் ஆசிரியர் மணி திருநாவுக்கரசு முதலியார் என்னையும் ஆசிரியத் துறையிலே ஈடுபடுத்துவதற்காக ஓர் நாள் என்னை நமச்சிவாய முதலியார் இல்லத்திற்கு அழைத்துச் சென்றார். அப்போது அவர் சென்னையிலே கோவிந்தப்ப நாயக்கன் தெருவிலே உள்ள "காவேரி இல்லம்" என்னும் நிலையத்திலே வாழ்ந்து வந்தார். நானும் என் ஆசிரியரும் அவரைப் பார்க்கப் போகும்போது அவர் ஒரு சாய்வு நாற்காலியிலே படுத்துக்கொண்டிருந்தார்.

அவரைச் சுற்றிப் பல பெரிய புலவர்கள் நாற்காலியிலே அமர்ந்து ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார்கள்.

அந்தக்காலத்துப் புலவர்கள் எந்தப் பேச்சிலும் எதுகை மோனைகளைக் கலந்து பேசுவதையே பழக்கமாகக் கொண்டிருந்தனர். அவர்கள் எதைக் குறித்துப் பேசிக்கொண்டிருந்தார்கள் என்பது எனக்குத் தெரிய வில்லை. நாங்கள் அங்கே சென்றபோது நமது முதலி யார் அவர்கள் தமக்கு அருகே இருந்த ஒரு புலவரைப் பார்த்து, "நீங்கள் இவ்விதம் பேசுவது சிறிதும் அடாது" என்று சிரித்துக் கொண்டே கூறினார். உடனே மற்றொரு புலவர் உங்கள் பேச்சு இங்கே சிறிதும் எடாது என்று கூறினார். இதைக் கேட்ட மற் ருெரு புலவர் "நீங்கள் அவரை அவ்விதம் சொல்லப் படாது" என்றார். உடனே பிறிதொருவர் "நாம் என்ன சொன்னாலும் அவர் உள்ளம் சுடாது" என்றார். பிறகு இவ்விதமே ஒவ்வொருவரும் தொடர்ந்து, இடாது, விடாது என்றெல்லாம் எதுகைமேல் எது கையோடு பேசிக்கொண்டே சென்றார்கள். உடனே நமது முதலியார் "இதனை இவ்வளவோடு விடுங்கள். வேறு எதையாவது பேசுவதற்கு எடுங்கள்" என்றார். அதே சமயத்திலே இதைக் கேட்டுக்கொண்டே வந்த ஒரு பெரிய மனிதர் நல்லது புறப்படுங்கள் என்றார். அப்போது நமச்சிவாய முதலியார் எங்கே புறப்பட வேண்டும்? கட்டளை இடுங்கள் என்றார். அப் பெரிய மனிதர் அப்போது ஓர் அழைப்பிதழை அவரிடம் காட்டினார். அதைப் பார்த்ததும் நமது பேராசிரியர் அடடா! நான் மறந்தே போனேன்; இந்த விருந்தை எல்லோரும் உடனிருந்து அருந்த வாருங்கள் என்று சொல்லிக்கொண்டே எழுந்தார். எழுந்தவர் எங்கள் ஆசிரியராகிய மணி அரசர் தோள்மீது கையைப்

போட்டு, "நீங்களும் வாருங்கள்" என அழைத்தார். அப்போது எங்கள் ஆசிரியர் எனக்குக் கொஞ்சம் "ஜோலி" இருக்கிறது என்று நகைத்துக் கொண்டே கூறினர். அடுத்திருந்தவர் இஃதென்ன கேலிப் பேச்சு; வாருங்கள் ஜாலியாக இருக்கலாம் என்று அவரையும் கையைப்பிடித்து அழைத்துச் சென்ருர். உடனே அந்த இடம் காலியாகிவிட்டது. நான் தன்னந்தனியனாக வீடுபோய்ச் சேர்ந்தேன்

ஒரு வாரம் கழித்து எங்கள் ஆசிரியர் என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து நமச்சிவாய முதலியாரைக் கண்டு வரும்படி அனுப்பினர். சென்ற வாரம் போலவே அப்போதும் மணி சுமார் பன்னிரண்டு இருக்கலாம். ஆனல் அங்கே அவரில்லை. வீட்டிலே இருந்தவர்கள் அன்றைக்கும் அவர் ஒரு பெரிய விருந்துக்குச் சென்றிருப்பதாகக் கூறினர்கள். ஆகையால் நான் என் வீட்டுக்குத் திரும்புவதற்கு எண்ணிக் கொண்டு அவர் வீட்டு வாசற்படி வரை வந்துவிட்டேன். அதே சமயத்தில் ஓர் அழகிய கோச்சு வண்டியிலிருந்து நமது முதலியார் பல புலவர்களுடன் வந்து இறங்கினர். கையில் கடிதத்தோடு நின்று கொண்டிருந்த என்னைக் கண்டதும், "நீங்கள் தானு 'முத்து' என்பவர்? நாவுக்கரசு கடிதம் கொடுத்திருக்கிருரா? உள்ளே வாருங்கள்" என்று என்னை அழைத்துக் கொண்டு, மேன் மாடியை அடைந்தார். அங்கே சென்றதும் அவர் தம் மனைவியாரை அழைத்து, அங்கு வந்துள்ள எல்லோருக்கும் இலைபோட்டு உணவு பரிமாறக் கட்டளையிட்டார். நல்ல காலம்! அங்குள்ளோர் எவரும் உணவு கொள்ளாமலே இருந்தார்கள்

ஆதலால், அந்த உணவை எனக்கும் பிற புலவர்கட்கும் அந்த அம்மையார் பரிமாறினார்கள். நமச்சிவாய முதலியார் எங்களோடு உடனிருந்து உணவுகொள்ளும்போது இடையிடையே இருபொருள் படும்படி பேச்சுக்களைப் பேசி எங்களையெல்லாம் சிரிக்கவைத்தார். உதாரணமாக அங்கே அவருக்கு "இலை இலை'' என்றார். 'இங்கே உங்களுக்குக் குரங்குக் கறிதான் கிடைக்கும், பூனைக்கறி இல்லையே என்று ஏக்கம் கொள்ளாதீர்கள்' என்றார். குரங்குக் கறி என்பது மரக்கறியையும் பூனைக் கறி என்பது மீன் முதலியவைகளையும் குறிக்கும் என்பதை உணர்ந்த புலவர்கள் நகைத்தனர்

இவ்விதம் நமது முதலியார் அவர்கள் அவரவர் உள்ளப் போக்குக்கு ஏற்ற வண்ணம் அவரவர்களோடு கலந்து உரையாடுவது வழக்கம். பெரிய புராணிகர்கள் வந்தால், கம்பராமாயணம், மகா பாரதம் முதலியவைகளிலே பொதிந்துள்ள அரிய கருத்துக்களை எல்லாம் அவர்கள் வியக்கும்படி எடுத்துப் பேசுவார். வேங்கடசாமி நாட்டார், கார்மேகக் கோனார் போன்ற புலவர்கள் வந்தால், சிலப்பதிகாரம், மணிமேகலை, தொல்காப்பியம் முதலிய சங்க நூல்களில் அவர்களோடு ஈடுபட்டு விடுவார். என்னைப்போன்ற இளைஞர்கள் வந்தால், எங்களுக்குக் கற்பிக்கும் வகையிலே, 'சிலர் நாகரீகம் என்பார்கள், அது தவறு ; நாகரிகம் என்றே சொல்லவேண்டும் ; சின்னபின்னம் என்பார்கள் சின்ன பின்னம் என்றுதான் சொல்ல வேண்டும்' என்றெல்லாம் எடுத்துச் சொல்லுவார் நமது முதலியார்.

பெரும்பாலும் தாம் பேசுவதைவிட மற்றவர்களிடமிருந்து ஏதாவது அரிய செய்திகளைத் தெரிந்து

கொள்ளவே விரும்புவார் ; எங்களைப் போன்ற இளைஞர்கள் வந்தாலும் தாம் எழுதிய பாடப் புத்தகங்களைக் குறித்து எங்கள் எண்ணங்களை அறிய விரும்புவார் ; சிறு குழந்தைகள் வந்தால்கூட அந்தக் குழந்தைகளிடம் "ஆ இது ஒரு அத்திப்பழம்" என்னும் பாட்டை இராகத்தோடு பாடி அவர்களை மகிழ்விப்பார். அந்தப் பேரறிஞரிடம் நான் அறிந்துகொண்ட அரிய செய்திகளையெல்லாம் இங்கே சொல்ல என்னல் இயலாது. அவர் கோபமாகப் பேசி நான் பார்த்ததேயில்லை. மற்றவர்கள் எல்லாம் கேட்பதற்கு அஞ்சிக்கொண்டிருந்த கேள்விகளை எல்லாம் நான் அவரிடம் சாதாரணமாகக் கேட்டு விடுவேன்.

நான் ஒருநாள் அவரைப் பார்த்து, "நீங்கள் பிற புலவர்களைப் போல அந்தாதி, கலம்பகம் முதலிய நூல்களையெல்லாம் இயற்ருது ஏன் பாடபுத்தகங்களை எழுத ஆரம்பித்தீர்கள் ?" என்று கேட்டேன். அப்போது அவர் சிறிது நேரம் அமைதியாக இருந்து பிறகு சொல்ல ஆரம்பித்தார். "நம் நாட்டிலே என்னைக் காட்டிலும் பேரறிஞர்கள் புராணம் இதிகாசம் கலம்பகம் முதலியவைகளையெல்லாம் வேண்டிய அளவுக்குச் செய்து வைத்து விட்டார்கள். நானும் என்னுடைய அறிவுக்கு ஏற்றவகையில் ஏதாவது நம்முடைய தமிழுக்குத் தொண்டு செய்யவேண்டுமென்று எண்ணினேன். அவ்விதம் எண்ணிப் பார்க்கும்போது ஆரம்பக் கல்வி மாணவர்கட்கு நல்ல வகையிலே ஒழுங்காக என்னல் நூல்கள் எழுதமுடியும் என்று எனக்குத் தோன்றியது.

அது எனக்கு மிகவும் எளிய செயலாக இருந்தாலும், அதற்காக நான் பல ஆங்கில நூல்களை யெல்லாம் விலைகொடுத்து வாங்கிப் படித்து நம் நாட்டின் நிலையையும், நம் குழந்தைகளின் நிலையையும் நன்கு எண்ணிப் பார்த்து எழுதத் துவங்கினேன். அது எனக்கு ஒரு வகையில் நல்ல பெயரையே கொடுத்தது. அந்த ஊக்கத்தினுல் உயர்நிலைப் பள்ளிகட்கும் பாடம் எழுதத் துணிந்தேன். உங்களைப் போன்ற ஆசிரியர்களின் நல்ல எண்ணத்தினுலே, அதிலும் நான் நல்ல பெயரையே ஒரு வகையில் பெற்றுவிட்டேன்'' என்று கூறினுர். அந்தச் சொற்கள் என் உள்ளத்தைப் பெரிதும் உருக்கி விட்டன. உடனே நான் ''என்னிடம் கூட இவ்வளவு எச்சரிக்கையோடு பேச வேண்டுமா? குழந்தைகட்கு மட்டுமின்றிப் பேரறிஞர்கட்கும் நல்ல கருத்துக்களை எடுத்துச் சொல்லும் திறமை வாய்ந்தவர்கள் நீங்கள். உங்களைப் போன்ற அறிஞரை நான் இது வரை கண்டதே இல்லை. நாங்கள் எல்லாம் இவ்வளவாவது நன்மை யடைந்திருப்பதற்கு நீங்கள் தான் காரணம்'' என்றெல்லாம் கூறினேன்.

அவர் தம்முடைய வாழ்க்கை வரலாற்றைத் தாமே எழுதி யிருப்பாரேயானுல், அஃது ஓர் ஒப்பற்ற வாழ்க்கை வரலாருகவே நமக்கெல்லாம் இருந்திருக்கும். அவருக்கு அறுபது வயது நிரம்பும் தருவாயில் இருந்தபோது அவரைப் பாராட்டுவதற்காக நாங்கள் எல்லாம் எவ்வளவோ திட்டங்கள் வகுத்திருந்தோம். அவரும் தம்முடைய மணி விழாவிற்குப் பிறகு, தம்முடைய வாழ்க்கை வரலாற்றை எழுதுவதாகவும், தமிழர்களுக்காகக் கடற்கரை ஓரத்திலே ஒரு பெரிய மண்ட

பம் எவ்விதமேனும் கட்டத் தீர்மானித்திருப்பதாகவும் எங்களிடம் கூறியிருந்தார். அத்தகைய நல்ல வாய்ப்பினை நாங்களும் நீங்களும் கொடுத்து வைக்கவில்லை. அந்த மணிவிழா நிறை வேறுவதற்கு முன்பாகவே நமது பேராசிரியர் இங்குள்ள எல்லோரையும் துன்பக் கடலில் ஆழ்த்திவிட்டு, பேரின்பக்கடலிலே மறைந்து விட்டார்.

அவர் மறைந்தாலும் அவர் பெயர் என்றும் மறையாது. அவருடைய பெயரைச் சொல்லிக் கொண்டு பேரும் புகழும் பெறுவதற்கு அவர் தம் அருந்தவக் குழந்தைகள் இன்றும் நல்ல நிலையிலே இருந்து வருகிறார்கள். அவருடைய மாணவர்கள் ஆயிரக்கணக்கிலே நம் தமிழ் நாடெங்கும் இருந்து அரிய பெரிய தொண்டுகளையெல்லாம் செய்து வருகிறார்கள். அவர் இயற்றியுள்ள அரிய பெரிய நூல்களும், கட்டுரைகளும், கவிதைகளும், நாடகங்களும் பிற வெளியீடுகளும் நம் தமிழ் நாட்டில் என்றும் நிலைத்து நிற்கும். தமிழர்கள் தம் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ள வேண்டுமானால், கடற்கரை ஓரத்திலே சிறிது முயற்சி எடுத்து அவர் தம் திரு உருவை நினைவுச் சின்னமாக நாட்டுதல் வேண்டும் என்று நம் நாட்டு மக்களை நான் வேண்டிக்கொள்கிறேன்.

(8)

# திரு.வி.க.வுடன் நான்

இயற்கைக் காட்சிகளையே தம் உள்ளத்தில் நினைந்து நினைந்து இன்புற்று இயற்கை யெழில் நலங் குறித்தே அழகொழுக எழுதியும் பேசியும் அருந்தொண் டாற்றி இயற்கையில் இரண்டறக் கலந்த தமிழ்ப் பெரி யார் திரு. வி. க அவர்களை நான் ஏறத்தாழ அறுபது ஆண்டுகளாக அறிந்து பழகி மகிழும் வாய்ப்பினைப் பெற்றேன். நானும் அவரும் ஒரே பள்ளியில் ஒரே ஆசிரியரிடம் தமிழ் பயின்றோம். வெஸ்லி மிஷன் கல்லூரியில் நான் ஏழாம் வகுப்பில் படித்துக் கொண் டிருந்த போது அவர் ஒன்பதாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார்.

பள்ளியில் திரு. வி. க. அவர்கள் ஒன்பதாம் வகுப்பினை அடைவதற்குள்ளாகப் பலப்பல இன்னல் கள் தோன்றி அவரை நிலை கலங்கச் செய்தன. மழலைப் பருவத்தில் உடற்கொழுமையோடு வளர்ந்த நம் தமிழ்ப் பெரியார் நான்காம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த காலை முடக்குவாத நோய் கண்டு இரண்டாண்டுக் காலம் பெருந்துன்ப முற்றார். பலப் பல சிகிச்சைகளினால் திரு வி. க. வின் உடல் நன்னிலை

யினை அடைந்தது. உடல் நலிவு காரணமாகப் படிப்பை நிறுத்திவிட்ட திரு வி. க. அவர்களைப் பெற்றோர்கள் மீண்டும் பள்ளிக்கு அனுப்ப நினைத்தனர். ஆனால் குடும்பச் சூழ்நிலை தடை விதித்து விட்டது. திரு வி. க. அவர்களின் அன்னையாரும் தந்தையாரும் நோய் வாய்ப்பட்டுப் பாயில் படுத்தனர். பொருள் முடையால் திரு வி. க. வின் தமையனாரும் படிப்பை நிறுத்த நேர்ந்தது. இந்நிலையில் திரு வி. க. அவர்கள் கவனிப்பாரற்றுத் தம் மனம் போன வண்ணம் அலைந்து திரிந்தார்.

திரு வி. க. அவர்கள் தம் தமையனாராய திரு. வி. உலகநாதர் இரண்டாண்டு மூத்தவர் எனினும் தம் இளவலைத் தமையன் போன்று நினைத்து அன்பு காட்டிய நிகழ்ச்சிகளை நான் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். தமையனும் தம்பியும் அன்பில் ஒருவரையொருவர் விஞ்சினர். தமையனார் ஓர் அச்சு நிலையத்தில் வேலைக்கமர்ந்தார். அவரால் குடும்பத்திற்குச் சிறிது ஊதியம் கிடைத்தது. இடையில் கல்வியை நிறுத்த நேர்ந்த திரு வி. க. அவர்கள் வெஸ்லி மிஷன் கல்லூரியில் சேர்ந்து படிக்கத் துவங்கினார். அக்காலத்தில் மிகுந்த பேரும் புகழும் பெற்றிருந்த நா. கதிர்வேல் பிள்ளை அந்தக் கல்லூரியில் இருந்து கொண்டு எங்கள் இருவருக்கும் தமிழ்ப் பாடம் கற்பித்து வந்தார்.

பத்தாண்டுகள் கழித்துச் சிறுவர் சங்கத்தின் காரணமாக நாங்கள் இருவரும் நெருங்கிப் பழகலானோம். இந்தத் தொடர்பு காரணமாகத் தமிழ்ப் பெரியார் அவர்களை அவ்வப்போது கண்டு அளவளாவி

மகிழ்வதை என் வழக்கமாகக் கொண்டிருந்தேன். இளவயதிலேயே அவருடைய பேச்சு வன்மை எல்லோருடைய உள்ளத்தையும் கவர்ந்து விட்டது. விபின் சந்திரபாலர், அன்னி பெஸன்ட் அம்மையார் ஆகியோரின் வீரம் செறிந்த சொற்பொழிவுகளைக் கேட்ட திரு வி. க. அவர்களுக்கு விடுதலை வேட்கை மிகுந்தது. தம் குடும்பத்தினர் வறுமையில் உழல்வதைச் சிறிதுகூட எண்ணிப் பார்க்காமல் தாம் அலுவல் பார்த்து வந்த வெள்ளையர் வாணிக நிலையமாகிய ஸ்பென்ஸர் கம்பெனியினின்றும் விலகிக் கொண்டார். விடுதலை வேட்கை ஒரு புறமும், தமிழார்வம் மற்றொரு புறமும், தொழிலாளர் நலன் பிறிதோர் புறமும் திரு வி. க. அவர்களை ஆட்கொண்டன. மகாவித்வான் தணிகாசல முதலியார், மறைமலை அடிகளார், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் ஆகியோர் தம் தொடர்பால் தமிழ்ப் பெரியாரின் தமிழறிவும், சைவப் பற்றும் பிறை மதியென வளர்ந்தன.

திரு. வி. க. அவர்கள் துவக்கத்திலேயே வெகு அழகாகவும் அருமையாகவும் பல்சுவைகளும் நனி சொட்டச் சொட்டச் சொற்பொழிவாற்றி யிருக்கின்றார். அவர்தம் இளமைப் பருவத்தில் பல நண்பர்களோடு இணைந்து நடத்திவந்த மன்றங்கள் இன்றும் நல்ல நிலையில் இருந்து வருகின்றன. அந்த நாட்களில் அம் மன்றங்களில் பல சிறந்த அறிஞர்களெல்லாம் சொற்பொழிவாற்றும்படி செய்தவர் நம் தமிழ்ப் பெரியாரே ஆவர். திரு. வி. க. அவர்கள் ஒரு நல்ல மேடைப் பேச்சாளராக மட்டுமின்றி உரையாடல்

வல்லுநராகவும் திகழ்ந்தார். மணிக்கணக்கில் அவர்களுடன் கலந்து உரையாடுவது மிகுந்த இன்பம் பயந்து அறிவு விளக்கம் தருவதாய் அமையும்.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்னும் குறள் தந்த இலக்கியமாகத் தமிழ்ப் பெரியார் அவர்கள் திகழ்ந்தார். பொதுவாகத் தலைவர்கள் ஏதேனும் ஒரு துறையில் மட்டும் புகழ் பெற்றவர்களாக இருப்பார்கள். ஆனால் நம் திரு. வி. க. அவர்களோ பல துறைகளிலும் பேரும் புகழும் பெற்றொளிர்ந்தார். முதன் முதலாக அரசியல் மேடைகளில் அழகுத் தமிழ் முழக்கம் செய்த பெருமைக்குரிய ஒரு சில தலைவர்களுள் நம் தமிழ்ப் பெரியார் தலையாயவர் ஆவார். வெஸ்லியன் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்து வந்த திரு. வி. க. அவர்கள் பதவியினின்றும் விலகி நாட்டு விடுதலைக்காக முழு நேரப் பணி புரிந்தனர் என்றால் அவர் தம் உரிமை உணர்வுக்கு வேறு சான்று கூறவும் வேண்டுமோ ? தேசபக்தன் என்னும் இதழின் ஆசிரியராக அமர்ந்து தமிழ்ப்பெரியார் அவர்கள் எழுதிய கட்டுரைகள் மக்களிடையே பெருமளவிற்கு விடுதலை உணர்ச்சியினைத் தூண்டி விட்டன. சாது அச்சுக்கூடம் என்னும் அச்சு நிலையத்தினைத் தொழிலாளர் தம் பேராதரவுடன் பெரியார் அவர்கள் துவக்கினார்கள். உடனே நவசக்தி என்னும் வார இதழினையும் வெளியிட்டனர். நவசக்தி இதழ்களில் திரு. வி. க. அவர்கள் எழுதிய தலையங்கங்களை இன்று படித்தாலும் மக்கள் வீறு கொண்டெழுவது உறுதியாகும்.

அச்சுக்கூடம் நிறுவிப் பணி புரியத் தொடங்கிய திரு. வி. க. அவர்கள் வாழ்க்கையில் ஒரு பெரும் புயல் வீசியது. அவர்தம் ஆருயிர்த் துணைவியாராய கமலாம்பிகை அம்மையார் இவ்வுலக வாழ்வை நீத்தார்கள். துன்பப் புயலும் வறுமைத் தீயும், உள்ள உறுதி வாய்ந்த நம் தமிழ்ப் பெரியார் அவர்களை என் செய்யும்? தமிழ்ப் பெரியார் கடமை மறவா முனிவராஞர். துன்பங்களில் ஆழ்ந்து மனத் தளர்ச்சியடையாமல் மேலும் உள்ள உறுதி பூண்டு தொழிலாளர் தலைவராக இருந்து அரும்பெருஞ் சாதனைகளைப் புரிந்தார். ஆங்கிலப் பட்டமோ, அயல்நாட்டு அனுபவங்களோ ஒரு சிறிதும் இல்லாத ஒரு தமிழ்ப் புலவர் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களை ஒன்று படுத்திக் கடமைகளை உணர்த்தி நிலையான இயக்கத்தினைக் கண்டார். பெண் கல்வி என்று பெண்களுக்காக உரிமைக் குரல் எழுப்பியவர் நம் திரு வி. க. அவர்களேயாவர். அவர்தம் பேச்சிலும் எழுத்திலும் பெண்ணின் பெருமை மிளிர்ந்தது. பெண்மையின் சிறப்பு ஒளிர்ந்தது.

பல்வேறு பணிகளுக்கிடையே என்றும் நிலைத்து நிற்கும் பல அரிய தமிழ் நூற்களைத் திரு. வி. க. அவர்கள் எழுதி வெளியிட்டார்கள். முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை, சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து, தமிழ்த் தென்றல், படுக்கைப் பிதற்றல், இருளில் ஒளி முதலிய ஐம்பதுக்கும் மேற்பட்ட அழியாச் செல்வங்களைத் திரு. வி. க. அவர்கள் அளித்தார்கள்.

திரு. வி. க. அவர்கள் திருக்குறட் கொள்கையே உலக ஒற்றுமைக்கு வழிகோலும் என்னும் எண்ணத்

தைக் கொண்டிருந்தார். நான் திரு. வி. க. அவர்களுடன் கலந்து உரையாடிய போதெல்லாம் இக்கருத்தினையே அடிக்கடி வலியுறுத்திக் கூறுவார். திரு. வி. க. அவர்களுக்கு எழுபதாம் ஆண்டு துவங்கும் பொன்னாள் வந்தது. நானும் என் நண்பர்கள் சிலருமாகத் தமிழ்ப் பெரியார் அவர்களைக் கண்டு வணக்கம் தெரிவித்து, வாழ்த்துரை பெற்றுவர அவர் தம் இல்லத்திற்குச் சென்றோம்.

அவர் அன்று உடம் நலம் குன்றிப் படுத்த வண்ணம் இருந்தும் எங்களைக் கண்டதும் தம் பிணியையும் பொருட்படுத்தாமல் படுக்கையைவிட்டு எழுந்து வணக்கம் தெரிவித்து எங்கள் அனைவரையும் உள்ளன்போடு வரவேற்று வாழ்த்தியருளினார். 'உலகம் ஒரு குடும்பமாகத் திகழ்வது எங்ஙனம் ?' என்னும் பொருள் குறித்துத் தமிழ்ப் பெரியாருடன் உரையாடத் தொடங்கினோம். அவர் தமிழ் நாட்டினையும் பிறநாடுகளையும் அரித்துவரும் பிளவும், பிரிவும், பிணக்கும் தேய்ந்து மறைந்து மக்களனைவரையும் ஒன்றுபடுத்த வல்ல மா மருந்து திருவள்ளுவம் ஒன்றுதான் என்று உறுதியாகக் கூறினார்.

தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் இறுதி நாட்களை எண்ணிப் பார்த்து எழுத என் உள்ளம் பெரிதும் கவல்கின்றது. 1953-ஆம் ஆண்டு செப்டம்பர் 15-ஆம் நாள் நான் என் நண்பர்களுடன் திரு. வி. க. அவர்களைக் காணச்சென்றிருந்தேன். உடல் மெலிந்து கண்பார்வை இழந்து படுத்த படுக்கையாக இருந்த திரு. வி. க. அவர்களைக் கண்டதும் ஆற்றொணுத் துயருற்றேன். என் வரவை உணர்ந்த தமிழ்ப்பெரியார்

" வாரும் ! பழைய நண்பரே " என்று இயம்பி ஆர்வம் மீக்கூரப் படுக்கையினின்றும் எழுந்திருக்க முயன்றார். அவர்களைத் தடுத்துப் படுத்திருக்குமாறு கேட்டுக் கொண்டேன். படுத்திருந்தே பேச ஆரம்பித்தார். மிகுந்த உடல் நலிவிலும் அவருடைய கணீரென்ற வெண்கலக் குரல் மண்டபத்தில் எதிரொலித்தது. அந்தப் பேச்சே அவருடைய இறுதிப் பேச்சாக அமைந்து விட்டதே என்பதை எண்ணி யெண்ணி அலமருகின்றேன்.

தமிழ்ப் பெரியார் திரு. வி. க. மறைந்தார் என்ற துயர்மிகு செய்தி என்னையும் என்போன்ற ஆயிரக் கணக்கான அன்பர்களையும் சோக வடிவங்களாக ஆக்கி விட்டது. ஆடவரும் மகளிரும், பண்டிதரும் பாமரரும் செல்வரும் ஏழைகளும் பல்வேறு கட்சித் தலைவர்களும் கூட்டம் கூட்டமாக வந்து தமிழ்ப் பெரியாரின் திரு. வுருவத்திற்கு வணக்கம் தெரிவித்துச் சென்றனர்.

பெரிய தமிழ் வீரராக இறக்கும் தருணம் வரையில் மக்களுக்காகவே உழைத்த அந்தப் பெரியாரின் நினைவுகளை எண்ணுந்தோறும் பொதுப் பணியிலே பேரூக்கம் பெறுகின்றேன். அவர்தம் பொன்னுரைகள் என்றும் என் செவிகளில் ஒலித்த வண்ணமிருந்து என் தொண்டுகளுக்கு ஆக்கம் அளித்து வருகின்றன.

வாழ்க திரு. வி. க. வின் திருப்பெயர் !

# (9)

## மணியரசரும் நானும்

"பூவே உன்னைப் படைத்தவர் ஆர்?
புது மணம் உள்ளே நுழைத்தவர் ஆர்?
பல பல நிறங்கள் பண்ணவர் ஆர்?
பார்க்க அழகு தந்தவர் ஆர்?
உன்னைச் செய்தோன் வல்லவனே!
உலகுக் கெல்லாம் நல்லவனே"

என்னும் இந்த அரிய பாடலைக் குழந்தைகள் நம் வானொலியிலும் கேட்டிருக்கலாம். இதைப் போன்ற பல அரிய அழகிய பாடல்களைக் குழந்தைகளுக்காகவும் பெரியோர்களுக்காகவும் சுமார் 35 ஆண்டுகட்கு முன்பே ஒரு பேராசிரியர் பாடிப் புத்தக மூலமாகவும் வெளியிட்டிருக்கிறார். அவர்தான் பேராசிரியர் மணி திருநாவுக்கரசு முதலியார் என்பவர். அவரை அறிஞர் பலரும் "பேச்சில் மணியே! எழுத்தில் மணியே! குணத்தில் மணியே!" என்றெல்லாம் அக்காலத்தி லேயே பாராட்டி யிருக்கிறார்கள். காவேரிப்பாக்கம் நமச்சிவாய முதலியார் இவரிடம் பேரன்பு கொண்டி ருந்தார். தமிழ்ப் பெரியார் திரு. வி. க. வும் இவரும் இணையில்லா நண்பர்களாக வாழ்ந்து வந்தார்கள். அந்தப் பேராசிரியரிடம் தமிழ் கற்றவர்கள் ஆயிரக்

கணக்கில் இன்றும் இருக்கிறார்கள். அவர்களுள் அடியேனும் ஒருவன்.

அத்தகைய பேரறிஞர் சரிதத்தில் ஒரு சில நிகழ்ச்சிகளை மட்டும் நாம் இப்போது தெரிந்து கொள்ளலாம். அவர் பிறந்தது செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த மணிமங்கலம் என்னும் கிராமமாகும். அந்த மணிமங்கலம் என்ற பெயரே சுருக்கமாக மணி என்று அவருக்கு அமைந்துவிட்டது. அவர் இப்போது இருந்திருப்பாரானால் நமது மதிப்பு மிக்க ஜவர்லால் நேரு அவர்கள் வயதுக்குச் சமமாக இருப்பார். அறிவாலும் ஆற்றலாலும் நம் தமிழ் நாட்டிற்கு ஒரு மாணிக்கமாகவே திகழ்ந்திருப்பார். ஆனால் அந்தோ! அவர் தம் 42-ஆவது அகவையிலேயே எங்களையெல்லாம் வருந்தும்படி செய்து விண்ணுலகை அடைந்து விட்டார். அந்த வயதிற்குள்ளாகவே அவர் ஆற்றியுள்ள அருஞ்செயல்கள் பலவும் அறிஞர்களால் பாராட்டக்கூடியனவாகவே இருக்கின்றன.

அவர் ஆரம்பப்பள்ளி வரையில் தங்கள் கிராமத்திலேயே படித்துவந்தார். அந்தச் சிறு வயதிலேயே பல அரிய நீதி நூல்களையும், அந்தாதி, கலம்பகம், தேவாரம், திருவாசகம் முதலியவைகளையெல்லாம் மனப்பாடம் செய்யத் துவங்கி விட்டார்.

பாரதம், இராமாயணம் முதலிய கதைகளைக் கூடத் தம் தந்தையாரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு தம் வயதையொத்த சிறுவர்கட்கெல்லாம் அவர்கள் மகிழும் வகையிலே சொல்லுவதில் வல்லமை பெற்றிருந்தார். அவர் நாள்தோறும் காலையில் எழுந்ததும் ''கல்லாப் பிழையும் கருதாப் பிழையும்'' என்னும் அடியையுடைய

பட்டினத்தார் பாடலைப்பாடி, "எல்லாப்பிழையும் பொறுத் தருள்வாய்" என்று கூறிக் கடவுளை வணங்கிய பிறகே படிக்கத் துவங்குவாராம். அவர் ஒவ்வொரு வகுப்பிலே யும் முதல்வராகவே இருந்துவந்தார். அவர் எட்டாம் வகுப்பு அரசாங்கத் தேர்வுக்குச் சென்றிருந்து விடை யெழுதி விட்டு வரும்போது மிகவும் வருத்தத்தோடு இருந்தார். அப்போது அவர் தம்பி "என்ன அண்ணு! உங்கள் முகம் வாட்டமாக இருக்கின்றது, தேர்வில் விடை சரியாக எழுதவில்லையா? என்று கேட்டார். உடனே அவர், "நான் அதற்காக வருந்தவில்லை, கடின மான கேள்விகள் எல்லாம் இருக்க அரசாங்கத்தார் மிகவும் எளிய கேள்விகளையே கேட்டுவிட்டார்கள். இந்தக் கேள்விகளுக்கு எல்லோருந்தாம் விடையெழு தப் போகின்ருர்கள். என் படிப்பின் திறமையைக் காட்டுவதற்கு ஒன்றிரண்டு கேள்விகள் கூடச் சிறந்த தாக இல்லாமற் போய் விட்டதே! என்ற வருத்தம் தான்" என்ருர்.

செங்கற்பட்டில் அவர் எட்டாம் வகுப்பு வரையில் படித்தார். அங்கே இருந்த ஆசிரியர்கள் எல்லாம் அவருடைய திறமையைக் கண்டு, "இந்தச் சிறுவன் எப்படியும் ஒரு கலெக்டராகவாவது வரப்போகிருன் பாருங்கள்" என்று மற்றப் பிள்ளைகளிடம் சொல்லு வர்களாம். அந்தச் செங்கற்பட்டிலே விளையாட்டிலே கூடச் சிறந்து விளங்கித் தம் வயதையொத்த மாணவர் களுக்கெல்லாம் ஒரு தலைவனைப் போன்று இருந்து வந்தாராம். ஒரு முறை ஒரு புது ஆசிரியர் வகுப்புக்கு வந்தபோது சில மாணவர்கள் அவருக்குத் தொந்தரவு கொடுக்கத் தொடங்கிஞர்களாம். இதை அறிந்த

திருநாவுக்கரசர், அவர்களைத் தனியே அழைத்து எச்சரிக்கைச் செய்து வகுப்பில் ஒழுங்காக இருந்து பாடத்தைக் கவனிக்கும்படி செய்தாராம். அவர் ஒன்பதாம் வகுப்பில் படிப்பதற்காகச் சென்னையிலே உள்ள தொண்டை மண்டலம் உயர்நிலைப் பள்ளிக்கு வந்து சேர்ந்தார். சென்னைக்கு வந்த பிறகு இங்குள்ள பெரிய புலவர்களை யெல்லாம் கண்டு அவர்களைப் போல் தாமும் பெரிய புலவராக ஆக வேண்டுமென்று அந்தப் பள்ளிப் பருவத்திலேயே நாலடியார், திருக்குறள், பெரிய புராணம், கந்த புராணம், இராமாயணம் முதலிய நூல்களிலுள்ள அரிய பாடல்களை யெல்லாம் நெட்டுருப் பண்ணிவிட்டாராம். அவர் பத்தாம் வகுப்பை அடைந்தபோது மறைமலை அடிகள், பூவை கலியாணசுந்தர முதலியார் ஆகிய இருவருடைய தொடர்பும் அவருக்குக் கிடைத்தது. அந்த இருவரையும் அவர் ஆசிரியராகக் கொண்டு சங்க நூல்களையும் ஞான சாஸ்திரங்களையும் அந்த இளவயதிலேயே படித்து முடித்துவிட்டார். அவர்தம் பத்தொன்பதாவது வயதிலேயே நல்ல தமிழ்ப் புலமை பெற்றிருந்தும் தமிழாசிரியராக ஆவதற்குப் போதிய ஆதரவு இல்லாமலிருந்தார். அப்போது தான் அவர் கா. நமச்சிவாய முதலியாரின் நட்பைப் பெற்றார். நமச்சிவாய முதலியார் அப்போது நல்ல நிலையிலிருந்தார். அவர் உதவியைப் பெறுவதற்காகத் திருநாவுக்கரசர், அவர் வேலையிலிருந்து வரும் சமயம் பார்த்து மிகவும் பணிவோடு அவர் எதிரே சென்று, "வணக்கம் ஐயா!" என்று கூறி வருவாராம். ஒரு நாள் நமச்சிவாய முதலியார் இவரை அருகே அழைத்து இவர் ஊர்

பெயர் முதலியவற்றைக் கேட்டறிந்து தம் வீட்டுக்கும் அடிக்கடி வந்து போகும்படி தெரிவித்தாராம். அந்தப் பேராசிரியரின் உதவியால்தான் இந்தப் பேராசிரியர் தமிழாசிரியர் பதவியைப் பெற்றார். அந்தப் பெரியாரின் மூலமாக இவரும் பல பெரியோர்களின் நட்பை யெல்லாம் பெற்றார்.

என்னை அவர் மாணவராக ஏற்றுக்கொண்ட வரலாறும் மிகவும் சுவையாக இருக்கும். நானும் என் நண்பர் ஒருவரும் "பாலர் சபை" என்ற ஒன்றை ஏற்படுத்தினோம். அந்தச் சபையிலே இளைஞராய அவரும் வந்து சேர்ந்தார். அங்கே அவருடைய பேச்சைக் கேட்டு நான் மிகவும் ஆச்சரியமே அடைந்தேன். அவர் எனக்கு இரண்டு வயது மூத்தவராக இருந்தார். ஆதலால் அவரை ஆசிரியராக ஏற்றுக்கொள்ள நான் முதலில் விரும்பவேயில்லை. அப்படி இருந்தும் என்னையும், என் நண்பர்களையும் அவர் ஒன்றுகச் சேர்த்துக்கொண்டு நாமெல்லாம் ஒன்றுக இருந்து திருக்குறள் படிக்கலாம் என்று சொல்லிக் கொண்டே எங்களுக்கு அவரே அந்தக் குறளிலுள்ள அரிய நீதிகளை யெல்லாம் விளக்கிக்கூற ஆரம்பித்துவிட்டார். அன்றியும், அவருக்கு என்னுடைய குணம் மிகவும் பிடித்துவிட்டது. ஆதலால், அவர் ஒரு நாள் எங்கள் வீட்டுக்கு வந்து என்னைத் தனியே அழைத்துக் கொண்டுபோய்ப் பலவிதமாகப் பாராட்டி முதலில் என்னைத் தம் மாணவனுக ஆக்கிக்கொண்டார். அவ்விதமே என்னைப் போன்ற வயதினையுடையவர்களாயிருந்த பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியார், வா. தி. மாசிலாமணி முதலியார் முதலிய

இளைஞர்கள் எல்லாம் அவரிடம் தமிழ் கற்கத் துவங்கி விட்டார்கள். அவர் பிரசங்கம் செய்யும்போது அவரைவிட வயதிலும் அறிவிலும் பெரியோர்களாக இருந்தவர்கள் எல்லாம் கேட்டு மகிழ்ந்து பாராட்டினார்கள்.

காலம் சென்ற ஞானியார் சுவாமிகள், அவருடைய பிரசங்கத்தைக் கேட்டுப் பாராட்டியதோடு "நாவில் அரசே! பாட்டில் மணியே!" என்றெல்லாம் சிறப்பித்துக் கடிதம் எழுதினார்கள் என்றால், மேலும் சொல்ல வேண்டுவதேயில்லை. அவருடைய பேச்சைப் போலவே கட்டுரைகளும் மிகவும் அழகாகவும் அருமையாகவுமிருக்கும். "செந்தமிழ்ச் செல்வி", "தமிழரசு" முதலிய பத்திரிகைகளுக்கெல்லாம் அவர் ஆசிரியராக இருந்திருக்கின்றார். இராமபிரான் சரிதையைக் கொண்டே நம் நாட்டு மக்கள், எல்லாரோடும் ஒற்றுமையாக வாழ வேண்டிய வழியினை மிக அழகாக எங்கள் ஆசிரியர் எடுத்துரைப்பார். சிலப்பதிகாரக் கதையிலிருந்து நம் தமிழ் நாட்டுப் பழக்க வழக்கங்களையெல்லாம் பேரறிஞர்களும் கேட்டு வியக்கும்படி விளக்கிக் கூறியிருக்கிறார். நம் தமிழ் நாடக உலகத்திற்கே தந்தை போன்று விளங்கும் பெரியாராய பம்மல் சம்பந்த முதலியார் தலைமையில் அவர் பேசிய பேச்சே இறுதிப் பேச்சாக முடிந்தது. பெரியார் சம்பந்த முதலியாருக்கும் அவர்மீது மிகவும் மதிப்புண்டு. எங்கள் ஆசிரியர் நகைச்சுவை, வீரச்சுவை, பக்திச்சுவை ஒவ்வொன்றிலும் பேசுவதிலும் எழுதுவதிலும் அந்தக் காலத்தே தலைசிறந்து விளங்கினார். அவருடைய பேச்சைக் கேட்கப் பெரியோரும் சிறியோரும், ஆடவரும் மகளிரும் கூட்டங்கூட்டமாக வந்துகுழுமி இருப்பார்கள்.

எங்கள் ஆசிரியர் பேசுவது போலவே பல அரிய பாடல்களை யெல்லாம் சிறிதும் துன்பமில்லாமல் உடனே பாடிக் காட்டியிருக்கிறார். அவர் ஒரு நாள் குளத்தில் குளித்துக்கொண்டே ஓர் அன்பரின் மீசையை மட்டும் வர்ணித்து முப்பது பாட்டுக்கள் பாடிக் காட்டினார். மற்றொரு நாள் நான் விளையாட்டாக முற்கால புலவர்களைப் போலப் பாட்டுப்பாடி மழையைப் பெய்விக்க உங்களால் முடியுமா என்று கேட்டேன். அவர் உடனே ஒரு பாட்டைப் பாடி மழையை வருவித்ததைக் கண்டு நான் ஆச்சரியமே அடைந்தேன். அவருடைய மனப்பாடம் செய்யும் திறமையை நன்றாகத் தெரிந்துகொள்வதற்காக நான் ஒரு நாள் எங்கள் ஆசிரியரிடம் அவ்வையார் பாடியுள்ள ''வெண்பாவை ஒரு காலிற் கல்லானை'' என்னும் பாட்டைப் பாடிக் காட்டி, "நீங்கள் ஒரு வெண்பாவை ஒரு முறை படித்த உடனே அந்தப் பாட்டைத் தவறில்லாமல் ஒப்பிப்பீர்களா?'' என்று கேட்டேன். அவர் அதற்கு 'வெண்பா மட்டுமன்று பெரிய விருத்தங்களைக்கூட நான் ஒரு முறை படித்தவுடனே தவறில்லாமல் ஒப்பிப்பேன்" என்றார். நான் அதைப் பரிசோதிக்க அவர் இதற்கு முன் படித்தே இருக்க மாட்டார் என்று சொல்லத் தக்க ஒரு பாட்டை எழுதிக் கொண்டுவந்து அவரிடம் காட்டினேன். அவர் அதை என்னையே ஒரு முறை நிறுத்திப் படிக்கும்படி சொல்லிவிட்டு உடனே அதைச் சிறிதும் தவறில்லாமல் ஒப்பித்துவிட்டார்.

"கல்வி மனப் பழக்கம்'' என்பதை நான் அப்போதுதான் நன்கு உணர்ந்துகொண்டேன். அவருக்கு ஒரு நாள் தம் இடக்கையில் வெண்குட்டம்

போன்று ஒரு மறு தோன்றியிருந்தது. அதற்காக அவர் மிகவும் வருந்தித் தணிகை முருகப் பெருமான்மீது நித்தம் பத்துப் பாடல்களாகச் சொல்லிக் கொண்டே வர நான் எழுதிக் கொண்டு வந்தேன். ஐந்து நாட்களிலே அந்த வெண்குட்டம் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. அவர் பாடிய இறுதிப் பாடலை மட்டும் நான் உங்களுக்குத் தெரிவிக்கின்றேன்.

> "நாளை பிணியென்னை நண்ணு திருப்பதற்கு
> நீள வருள்சுரக்க நின்னடியிவ்—வேளை
> தலைக்கே யணிந்தேன் தலமார் தணிகை
> மலைக்கே பணிந்தேன் மகிழ்ந்து."

குழந்தைகளே! மணி. திருநாவுக்கரசர் ஒரு பெரிய புலவர் மட்டுமல்லர். அவர் ஒரு சிந்தனைச் சிற்பி; சீர்திருத்தச் செம்மல்; கொடை வள்ளல்; செயல்வீரர்; குழந்தைகளைப் போன்ற இளகிய உள்ளம் வாய்ந்தவர்; குரு பக்தி மிகுத்தவர்; "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்னும் கொள்கையை உறுதியாகக் கொண்டவர். அவர் மறைந்தபோது,

"கற்றோர்தம் கண்ணே; முற்றாத நடு வயதில் மறைந்தனையே!" என்று கா. நமச்சிவாய முதலியாரும், "பாவுக்கரசே! ஐயோ! அகன்றனையே!" என்று திரு. வி.க. அவர்களும், 'நாவுக்கரசனெனன்னும் நாதனை யிழந்த ஐயோ தமிழ் நாடே!'' என்று பாசிப்பாக்கம் கண்ணப்ப முதலியாரும் மற்றும் பலரும் கண்ணீர் விட்டுக் கதறி அழுதனர். அத்தகைய பெரியோர் குழந்தைகளுக்காகவும் பெரியோர்களுக்காகவும் ஏறத்தாழ முப்பது அரிய நூல்களை இயற்றிச் சென்றிருக்கின்றார். அவர் குடும்பம் விளங்க அவருக்கு ஆணி

லும் பெண்ணிலும் குழந்தைகள் இருக்கின்றனர். அவர்கள் அவருடைய பெயரை முன்னுக்குக் கொண்டு வருவார்கள் என்று தான் எண்ணுகின்றேன்.

அவருடைய வாழ்க்கைக் குறிப்பினைக் கேட்டறிந்த நீங்கள், அவரைப் போன்று குருபக்தி, கடவுளிடத்தில் அன்பு, கல்வியில் பெரிதும் ஆர்வம் முதலிய குணநலன்களோடு வாழ்வீர்களாக! என வாழ்த்தி இதை முடித்துக் கொள்கிறேன்.

# (9)



# மணியரசரைக் கண்டேன்

1959-ஆம் ஆண்டு திசம்பர் 31-ஆம் நாள் இரவு 11 மணிக்குமேல் இந்தத் தைமாதப் பொங்கல் மலருக்காக ஒரு கட்டுரை எழுதலாமென்று நான் எண்ணினேன். பேனாவைக் கையில் பிடித்துக்கொண்டு என்ன எழுதலாமென்று சிறிது நினைத்துப் பார்த்தேன்.

இந்த ஆண்டு இந்தியாவைக் காணவந்த அமெரிக்க நாட்டுத் தலைவர் நம் தென்னாட்டைப் பார்க்காமல் சென்றுவிட்டாரே அதைக் குறித்து எழுதலாமா என்று எண்ணினேன்.

நம்மினும் தாழ்ந்த நிலையில் இருந்த சீனா இப்போது விழித்துக்கொண்டு நம் நாட்டின்மீது போர் தொடுக்க வந்துள்ள நிலையைக் குறித்து எழுதலாமா என்று எண்ணினேன்

நம் நாட்டு இளைஞர்கள் உருஷ்ய இளைஞர்களைப் போன்றும் அமெரிக்க இளைஞர்களைப் போன்றும் விஞ்ஞானத்திலே சிறந்து இருந்தால் இத்தகைய மதிப்புக் குறைவு ஏற்படுமா என்று எண்ணியும் ஒருபுறம் வருந்தினேன். பிற நாடுகளெல்லாம் தலைநிமிர்ந்து வாழும்

இந்தக் காலத்திலே இன்னும் நமக்குள்ளாகவே ஒற்றுமையில்லையே என்றும் எண்ணி வருந்தினேன்.

நம் நாட்டு மக்களின் ஒற்றுமைக்காகப் பாடுபட்ட எங்கள் ஆசிரியர் மணி. திருநாவுக்கரசர், காவேரிப்பாக்பாக்கம் நமச்சிவாயனுர், தமிழ்ப்பெரியார் திரு. வி. க. இவர்களெல்லாம் இப்போது இருந்தால் எவ்வளவு நலமாக இருக்கும் என்ற எண்ணமும் ஒருபுறம் எழுந்தது. அண்மையில், நாவலர் சோமசுந்தர பாரதியார் நம்மைவிட்டு மறைந்துவிட்ட துயர நிகழ்ச்சியும் நினைவுக்குவர, அவர் ஒருமுறை என்னிடம் விளக்கிக் கூறிய அவர்தம் இளம்பருவ வீரச்செயலை எழுதலாம் எனவும் நான் எண்ணினேன்.

பொங்கல் நன்னுளே தமிழர்தம் புத்தாண்டின் முதல்நாள் என்பதை நம் நாவலர் பாரதியார் அவர்கள் சொல்லுவதையே மேலும் விளக்கி எழுதலாமா என்றும் நான் எண்ணலாயினேன்.

இவ்விதம் பலப்பல எண்ணிக்கொண்டே சிறிது நிமிர்ந்து பார்த்தேன். வடலூர் வள்ளலார் திருவுருவப் படம் என் கண்முன் தோன்றியது. 'நம்முடைய வள்ளலார் இறந்தவர்களையெல்லாம் எழுப்பலாம் என்று தெரிவித்தாரே அந்த வித்தையையாவது அவர் சொல்லிச் சென்றிருந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும்' என்று எண்ணிப் பார்த்தேன். அதற்குள் இளைப்பும் களைப்பும் மேலிடுவது போன்று இருந்தது. அப்போது மணி இரவு 11-30-க்கு மேல் இருக்கும். நான் இருந்த அறையில் எவருமே இல்லை. அத்தகைய தனியான இடத்திலே 'திடும்' மென வள்ளலாரே என் கண்முன் தோன்றி, என்னிடத்திலே ஒரு

சிறு புட்டியைக்கொடுத்து, 'இதிலுள்ள மருந்தை இறந்தவர்கள் புதைக்கப்பட்டுள்ள இடத்தில் தெளித்தால் அவர்கள் மீண்டும் உயிர்பெற்று எழுவார்கள்' என்று சொல்லி உடனே மறைந்துவிட்டார்.

என் கையில் அந்த மருந்துப் புட்டிமட்டும் இருந்தது. அதையெடுத்துக்கொண்டு உடனே நான் நேரே அந்த நள்ளிருளில் மூலக்கொத்தளத்தில் அமைந்துள்ள இடுகாடு சென்று எங்கள் ஆசிரியரின் நினைவாகக் கட்டப்பட்டுள்ள நினைவுச் சின்னத்தின்மீது அந்தப் புட்டியில் இருந்த மருந்தில் ஒரு சிறிது எடுத்துத் தெளித்தேன்.

எங்கள் ஆசிரியர் உறக்கத்திலிருந்து எழுந்தவர் போல் அந்த நினைவுச் சின்னத்திலிருந்து எழுந்து அருகே இருந்த ஒரு திண்ணையின் மீது அமர்ந்தார். அவர் முதலில் என்னை அடையாளம் தெரியாமல் சிறிது விழித்தார். பிறகு உற்றுப் பார்த்து, 'ஆ! முத்துக்குமாரசாமி! நீயா இவ்வளவு மாறிவிட்டாய்!' என்று ஆச்சரியத்தோடு கேட்டார். 'நான் நன்றாகத் தூங்கிவிட்டேன். நான் இன்று 'திராவிடன்' இதழில் எழுதிய கட்டுரையைப் படித்துப் பார்த்தாயா? அந்தப் பத்திரிகையை 'எடு' என்று அவரே மறுபடியும் என்னைப்பார்த்துக் கேட்டார். அப்போது நான், நீங்கள் அந்தக் கட்டுரையை 1931-ஆம் ஆண்டு மே மாதம் 23-ஆம் நாள் சனிக்கிழமை காலை பத்துமணியளவில் எழுதினீர்கள். இப்போது 1959-ஆம் ஆண்டு நிகழ்கிறது. நீங்கள் சொல்லிய திராவிட தினசரி இப்போது வார இதழாக மாறிவிட்டது. சுமார் பன்னிரண்டு ஆண்டுகளாக என் மாணவர் என். வி. நடராசன்

அதை நடத்தி வருகின்றார் என்று விளக்கிக் கூறி னேன். நான் சொன்னவை எல்லாம் அவருக்கு ஆச் சரியமாக இருந்தன போலும்! அவர் உடனே தம் கண் களை நன்றாகத் துடைத்துக் கொண்டு, 'நான் இவ்வளவு காலமாகவா உறக்கத்தில் இருந்தேன்! நான் பச்சை யப்பன் கல்லூரிக்கு விடுமுறை விண்ணப்பம்கூட எழுதி அனுப்பவில்லையே; இப்போதாவது உடனே நான் கல்லூரிக்குச் செல்லவேண்டும். இன்று என்ன கிழமை ? இப்போது மணி என்ன ? என்றார்.' இன்று வியாழக்கிழமை இரவு 11 மணிக்குமேல் ஆகிறது.

உங்களுக்குப் பச்சையப்பன் கல்லூரியில் இடம் இராது. அந்த இடத்தில் *டாக்டர் மு. வரதராசனார் அமர்ந்திருக்கின்றார். அது இருக்கட்டும். உங்களுக்குப் பசியாக இருக்கும். இந்தப் பழங்களை உண்டு சிறிது பால் அருந்துங்கள் என்று நான் முன்னெச்சரிக்கை யாக எடுத்துச் சென்ற பழங்களை அவர் முன்பு உரித்து வைத்தேன். அவர் மிகவும் ஆவலோடு அந்தப் பழங் களை உட்கொண்டார். 'தெர்மா' பிளாஸ்கிலிருந்து வார்த்துத் தந்த பாலினையும் சிறிது அருந்தினார். சிறிது நேரத்திற்குள் அவருக்கு ஊக்கம் அதிகரித்தது. முகத்திலும் நல்ல களை பிறந்தது. உடனே அவர் தம் மனைவியை நினைத்துக்கொண்டார். 'சரஸ்வதியை மருத்துவ மனையிலிருந்து அழைத்துவந்து விட்டீர் களா?' என்று கேட்டார். நீங்கள் சொல்லுவது 29 ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த செய்தி. தங்கள் மனைவி யார் சரஸ்வதி யம்மையார் மருத்துவ மனையிலிருந்து வந்து சுமார் ஓராண்டு உயிருடன் இருந்து பிறகு

---

*இப்போது பேராசிரியர் பரமசிவானந்தம் இருக்கிறார்.

மறைந்துவிட்டார்கள். அவர்கள் இறந்து இப்போது 28 ஆண்டுகள் ஆகின்றன. நீங்கள் இறந்த துயரத்தாலேயே அவர்களும் இறந்து விட்டார்கள். 'அப்படியா ! நான் இறந்த நிலையிலேயா கிடந்தேன் ? 'உறங்குவதுபோலும் சாக்காடு' என்று வள்ளுவர் சொல்லியது மிகவும் பொருத்தமாகவே இருக்கிறதே !' என்று சொல்லி அவர் ஆச்சரியப்பட்டார். பிறகு அவர், "என் மகன் சபாரத்தினம் எங்கே? மணி. கோட்டீசுவரன் எங்கே ? பாரிப்பாக்கம் கண்ணப்பர் என்ன சொல்கிறார் ? நான் இப்போது எங்கே இருக்கிறேன்? எங்கேயோ ஒருதோட்டத்தில் இருப்பது போலல்லவா தோன்றுகின்றது. என்னை நீ இங்கே எவ்விதம் அழைத்துவந்தாய்?' என்றெல்லாம் கேட்கத் துவங்கி விட்டார்.

அவர் மார்புநோயால் இறந்து 29 ஆண்டுகள் ஆவதையும், எனக்கு இராமலிங்க அடிகளார் நேரில் வந்து கொடுத்த மருந்தைக்கொண்டு அவரை எழுப்பிய வரலாற்றையும், அவர் இப்போது மூலைக் கொத்தளத்தில் உள்ள இடுகாட்டில் இருப்பதையும் அறிவித்தேன்! பிறகு அவருடைய மைந்தன் ஓர் உயர்ந்த பதவியில் எம்.ஏ.,எல்.டி. பட்டத்துடன் பம்பாய் நகரத்திலே தம் மனைவி மக்களோடு வாழ்ந்து வருவதையும் விளக்கிக் கூறினேன். பாரிப்பாக்கம் கண்ணப்பர், காவேரிப்பாக்கம் நமச்சிவாயனார், திரு. வி. கலியாண சுந்தரனார், மறைமலையடிகளார், வல்லை. சண்முகசுந்தரனார் ஆகிய இவர்களெல்லாம் இறந்து பல ஆண்டுகள் ஆகின்றதையும் தெரிவித்தேன். அப்போது அவர் பெரிதும் வருந்தி, 'பிறகு நீ வைத்திருக்கும் மருந்தைக்கொண்டு

அவர்களையெல்லாம் எழுப்பிவிடக் கூடாதா?' என்று ஆவலோடு கேட்டார். அவர்களை எழுப்புவதற்கு அவர்கள் உடலைக் கொளுத்திய சாம்பல்கூட இல்லையே என்று சொல்லி நான் வருந்தினேன். 'அப்படியானால் என்னை மாத்திரம் ஏன் எழுப்பினாய்? நான் தனியாக இங்கே இருந்துகொண்டு என்ன செய்வது?' என்று சொல்லிக்கொண்டே இருக்கையில், திடீரென்று அவருக்குப் பழநியாண்டிப் பிள்ளை அவர்களின் நினைவு வந்தது. 'அந்தக் கம்பெனி எடுபட்டுவிட்டது' என்றும், அவர்தம் சொந்த ஊரில் ஓய்வாக இருக்கிறார் என்றும் கூறினேன். பிறகு, 'நீ என்ன செய்கிறாய்? உன் நிலையைக் குறித்துச் சொல்லவே இல்லையே. அந்தப் பெரிய பேச்சாளர் இராமசாமி நாயகர் எப்படி இருக்கிறார்?' என்றார். நான் என் ஆசிரியத் தொழிலை விட்டு ஓய்வாக இருந்துகொண்டு 'மாணவர் மன்ற'த்தை நடத்தி வருவதையும், இராமசாமி நாயகர் பெரியார் ஈ. வெ. ரா. என்னும் புகழுடன் சிறப்பாகவே இருந்துவருவதையும், 'தி. மு. கழகம்' என்னும் ஒரு புதுக் கட்சியை அவர் மாணவர் சி. என். அண்ணாதுரை அவர்கள் அறிஞர் என்ற சிறப்புக்குரியவராய் மிகத் திறமையாக நடத்திவருவதையும் விளக்கிக்கூறினேன்.

இந்தியாவுக்குச் சுயஆட்சி வந்ததையும் பிறகு நான் கூறினேன்; முடிவில் 'இந்தி' என்னும் வடநாட்டு மொழி நம் தமிழை அடக்க முயலுவதையும் தெரிவித்தேன். இதைக் கேட்டதும் அவருக்கு மீசை துடித்தது. கண்கள் சிவந்துவிட்டன. "அப்படியா! இப்போதே புறப்படு! உடனே ஒரு மாநாடு கூட்டு! அந்தப் பயல்களை வெளுத்து வாங்கிவிடுகிறேன். அந்த இந்

தியை நம்நாட்டை விட்டே ஓட்டிவிடுகிறேன்" என்று மிகவும் ஆத்திரத்தோடு தம் இருப்பிடத்தை விட்டு எழுந்தார். உடனே அவருக்குப் பழைய மார்புநோய் வந்துவிட்டது. அப்போது அவர் தமக்குப் பழக்க மான மருத்துவர்களின் பெயர்களை யெல்லாம் கூறி அவர்களை அழைத்து வரும்படி எனக்குக் கட்டளையிட் டார். 'அவர்களெல்லாம் இறந்து போய்விட்டார்களே; உங்கள் நோய்க்குத் தங்களிடம் மருந்தே இல்லை யென்று அவர்கள் அப்போதே சொல்லிவிட்டார் களே' என்றேன். எங்கள் ஆசிரியர் சிறிதுநேரம் ஏதோ சிந்தனையிலிருந்து, பிறகு 'முத்து! இனியென் னால் இந்த மார்புநோயைப் பொறுத்துக்கொள்ள முடி யாது. இத்தகைய நோயாளியை ஏன் மீண்டும் உயிர்ப் பித்தாய்? நீயும் நின் மாணவர்களுமாவது உடலைப் பாதுகாத்துக்கொண்டு நம் தமிழுக்குத் தீங்குவாரா வகையில் தொண்டு செய்யுங்கள்' என்று சொல்லிக் கொண்டே நான் வைத்திருந்த மருந்துப்புட்டியை வாங் கிப் படித்துப்பார்த்தார். பிறகு அந்த மருந்தில் கொஞ் சம் எடுத்துத் தம் தலையில் தெளித்துக் கொண்டார். உடனே அவர் பழையபடி நினைவுச் சின்னமாக மாறி விட்டார்.

நான் உடனே அந்தப் புட்டியில் என்ன எழுதி இருக்கின்றது என்று படித்துப்பார்த்தேன். 'உயிரோடு இருப்பவர்கள் மீது தெளித்தால் அவர்கள் உடனே இறந்துவிடுவார்கள்.' என்று அதில் எழுதப்பட்டிருந் தது. ஒற்றுமையில்லாத இந்த உலகத்திலே—பிற நாடுகளெல்லாம் ஏளனத்தோடு இகழ்ந்து நோக்கு கின்ற தன்மையிலுள்ள இந்தத் தமிழ்நாட்டிலே இருப்

பதைவிட இறந்துபோவதேமேல் என்று எண்ணி மறு படியும் அவர் நினைவுச்சின்னமாக மாறிவிட்டாரோ என்று எண்ணியெண்ணி நான் வருந்தினேன். அத் தகைய பேரறிஞரே இறந்த பிறகு நான் மட்டும் இன் னும் உயிர்வாழ வேண்டுமா? நானும் இதில் ஒரு துளியெடுத்து என் தலையில் தெளித்துக்கொள்ள லாமா? என 'எண்ணிக்கொண்டே நிமிர்ந்தபோது என் கையில் இருந்த பேனா 'பொத்' என்று தரையில் விழ நான் உடனே திடுக்கிட்டு விழித்துக்கொண்டேன். எழுந்து பார்க்கும்போது சரியாக இரவு பன்னிரண்டு மணி. அப்போதுதான் ஆங்கிலப் புத்தாண்டு (1960-ஆம் ஆண்டு சனவரி முதல் நாள்) பிறந்து விட்டதை அறிந்தேன். அந்தக் கனவினையே ஒரு கட்டுரையாக எழுதித் 'திராவிடன்' பொங்கல் மலருக்கு அனுப்பத் தீர்மானித்தேன்.

தமிழ்நாட்டு இளைஞர்களே! இது கனவோ நினைவோ எதுவாக இருப்பினும் நம்நாடு பிறர் பார்த்து நகையாடும் நிலையிலே வளங்குன்றி இருப்பது உண்மை. நம் நாட்டைப் பார்த்துப் பிறர் மதிக்கும்படி யான நிலைமையில் நாம் சமர்த்தாக இருக்கவேண்டும். இதை நம் தலைவர்கள் ஒவ்வொரு மாநாட்டிலும் கூறி வருகின்றனர். இந்தப் புத்தாண்டில் இருந்தேனும் நீங்கள் பிற நாட்டுக்குச் சரிநிகர் சமானமாக வாழ முய லுங்கள். அந்தச் சீரிய முயற்சியே நம் முன்னோர் களுக்கும் நம்மைவிட்டுப் பிரிந்த தலைவர்களுக்கும் தொண்டர்களுக்கும் தமிழ்த் திருநாளாகிய இன்று நாம் அளிக்கும் அன்புப்படையலாகும். அனைவருக்கும் எனது வாழ்த்தும் வணக்கமும் உரியன ஆகுக.

# குழந்தை உள்ளம்

உங்கள் கண்களுக்கெதிரே ஒரு குழந்தையின் உருவம் தோன்றுவதாக எண்ணிக் கொள்ளுங்கள். நல்ல அழகான குழந்தை! அது பிறந்து இன்னும் இரண்டு நாட்கள் கூட ஆகவில்லை. அதற்குக் கண், காது, கை, கால் முதலியன யாவும் குறைவற அமைந் துள்ளன. இப்போது நாம் அதன் உள்ளத்தின் நிலையினைப் பற்றிச் சிறிது நினைத்துப் பார்க்கலாம்.

உள்ளம் என்னும் ஒன்று இவ் விளம்பருவத்தில் அதற்கு உண்டா என்பதே சந்தேகம். உணர்ச்சிக் கருவிகள் அனைத்தும் நன்கு அமைந்திருந்தும் இன் னும் நன்ருகத் தொழில் படவில்லை. அதற்கு அப் போது ஸ்பரிச உணர்ச்சியே பெரும்பாலும் இருக்கும். அதுவும் தட்பம் வெப்பம் முதலியவைகளையே ஒருவாறு தெரிந்து கொள்ளும் பால் குடித்தல், கை கால்களை அசைத்தல், உறங்குதல், அழுதல் இவைகளே அக் குழந்தையின் தொழில்கள். அவைகட்குத் தக்கபடி உணர்ச்சிக் கருவிகளும், மூளையும் சிறிது வேலை செய்து இருக்கலாம். அவை இயற்கைச் செயல்கள். உள்ளத் தால் உணர்ந்து அக்குழந்தை அவைகளைச் செய்த தாகக் கூறமுடியாது.

அக்குழந்தையின் உள்ளத்தை நன்கு கவனிக்க இன்னும் சில நாட்களேனும் நாம் பொறுத்திருக்க வேண்டும். அப்பொழுது அக்குழந்தை நம்மைப் பார்க்கிறது. ஆனால் எவ்விதம் பார்க்கிறது? நம்முடைய வடிவினை அது உணராது. ஏதோ ஓர் உருவம் போல் தோன்றும்; அதுவும் ஒரு மங்கலான நிறமாக அதற்குத் தோன்றலாம். நம்மை விட, விளக்கு அதற்கு ஆச்சரியமான பொருள். முதலில் திகைப்பு, பிறகு பழக்கத்தால் ஒளியைக் குறித்த ஓர் உணர்ச்சி; இவ்விதமே அன்னையின் தாலாட்டும், கொஞ்சிக் குலாவும் மொழிகளும் ஒலி வடிவில் பொருளின்றி அதன் மூளையில் பதிகின்றன. குறைந்தது மூன்று மாதங்களேனும் கழிந்தால்தான், அக்குழந்தை உணர்வுடைய ஒரு பொருளாக நமக்குத் தோன்றும். அப்போது அது நம்மைக் கண்டு சிரிக்கிறது. குரல் ஒலி எங்கிருந்து வருகிறது என்று அறிய முயல்கிறது. பச்சை, சிவப்பு, மஞ்சள் முதலிய நிறங்களைக் கண்டு மகிழ்கிறது.

இப்போது நாம் அதன் உள்ளத்தை ஒருவாறு அறியலாம். உள்ளம் என்பது என்ன? அஃது ஒரு பெரிய கேள்வியே. எனினும் மூளை, கண், காது, முதலிய இயந்திரங்கள், கை கால், முதலிய உறுப்புக்கள், ஆகிய அனைத்தும் தொழிற் படுவதற்குக் காரணமாகிய ஒன்று என்று வைத்துக்கொள்ளலாம். உள்ளம் எங்கே இருக்கின்றது? அது மிகப் பெரிய கேள்வி. அது, நம் உடம்பின் எல்லாப் பாகங்களிலும் இருந்து மூளையுடன் சம்பந்தம் பெற்றிருக்கின்றது. எழுத்துக்களாக நினைக்கும் போது நெஞ்சிலிருக்கின்றது

படங்களாக நினைக்கும் போது புருவ மத்தியிலிருக்கின்றது; உறங்கும்போது மூளையிலிருக்கின்றது; அவ்விதமுள்ள ஒரு சக்தி என்று கூறலாம். அந்த உள்ளம் நன்ருக வளர்ந்த மனிதர்களிடத்தில் நமக்கு விளக்கமாகத் தெரியவில்லை. ஒருவன் தன்னிடமுள்ள கெட்ட குணங்களை முற்றிலும் மறைத்து நம்மிடம், மிகவும் நல்லவன் போல் நடிக்கலாம். ஆனால் அக்குழந்தையோ அவ்விதம் செய்யாது. அதன் உள்ளம், கள்ளம் கபடமற்றது. அதன் உள்ளத்தில் தோன்றுபவைகளை யெல்லாம் அது தன் முகத்தில் தெரிவித்து விடும். அதன் முகந்தான் கண்ணுடிக்குச் சரியான உவமை. அதனை நாம் ஒரு நிமிட நேரத்தில் அழவைக்கலாம். அடுத்த நிமிடத்தில் அதனைச் சிரிக்க வைக்கலாம். அது தேம்பித் தேம்பி அழுவதையும், அழுத கண்ணீர் உலருவதற்குள் சிரிப்பதையும், சின்னஞ்சிறு செயல்களையெல்லாம் பார்த்துப் பார்த்து ஆச்சரியப் படுவதையும் நாம் அனைவரும் கண்டுகளிக்கின்ரேம். அந்த வயதில் அதை யார் விரும்பினுலும் எடுத்துச் சீராட்டலாம்; பாராட்டலாம். அதற்கு அவர் அயலார், இவர் உறவினர் என்பது இல்லை. அது யாரைக் கண்டாலும் சிரிக்கும். அதனிடம் பகைமைக் குணம் சிறிதும் இல்லை. வஞ்சனை, பொருமை, முதலிய குணங்களும் இல்லை. அதற்குப் பசுவும் சிங்கமும் ஒன்றே; கிளியும் பாம்பும் ஒன்றே; அதற்கு அச்சம் சிறிதும் இல்லை. "அச்சமில்லை அச்சமில்லை" என்று பாரதியார் பாடிய பாடல் அதற்கு வேண்டுவதே இல்லை வள்ளுவர் வகுத்துரைத்த நீதி நூல்களும் அதற்கு வேண்டுவதில்லை. அக்குழந்தை ஒரு வகையில் பெரிய

ஞானி. அன்று, தெய்வப் பிறப்பு. தெய்வத்தையும் குழந்தையையும் ஒன்ருக வைத்துக் கொண்டாடுகிருர்கள் அல்லவா? அத்தகைய தூய உள்ளம் வாய்ந்த குழந்தைகளின் உள்ளத்தைப் பாராட்டாதவர் யாவர்? அதன் வடிவைச் சித்திரிக்காத ஓவியக்காரனும் உளனே? அதன் வடிவ அழகினையும் குண நலன்களையும் புகழ்ந்து பாடாத புலவனும் உண்டோ?

அத்தகைய குழந்தைகளாலேயே இவ்வுலகம் நடைபெறுமாஞல் – இவ்வுலகம் குழந்தை உலகமாகவே நிலவி விடுமாஞல், இங்கே வஞ்சனை, பொருமை, கோபம் முதலிய தீய ஒழுக்கங்களுக்கு இடன் உண்டோ? உலக அமைதியைக் கெடுக்கவல்ல போர்க்குழப்பந்தான் உண்டோ? திரு. வி. க. பெரியார் கூறும் பெண்மை அழகும் இயற்கையெழிலுமாகவே பொலிவுற்று உலகம் விளங்கும் அல்லவா? அப்படியாஞல் இப்போது நாம் அனைவரும் குழந்தைகளாக ஆகிவிடலாமா? ஆஞல் நம்மைச் சீராட்ட ஒரு தாய் வேண்டும்; காப்பாற்ற ஒரு தந்தையும் வேண்டும். எல்லாம் வல்ல இறைவியும் இறைவனுமே தமக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்து நம்மைக் காப்பாற்ற உடன்படுவதாக வைத்துக் கொள்வோம். அவ்விதம் உடன்பட்டாலும் அவர்கள் நம்மை மூன்றுமாதக் குழந்தைகட்கு மேல் வளரவொட்டாமல் தடுத்து வைக்கவேண்டும்! இல்லையேல் 'குழந்தை வளர்ந்து குரங்காக முடிந்தது' என்னும் பழமொழிக்குத் தான் நாம் ஆளாவோம். மறுபடியும் பொருமை வஞ்சனை எல்லாம் ஒன்றன்பின் ஒன்ருக வந்து நம்மைச் சூழ்ந்து கொள்ளும்.

அவ்விதம் எல்லோரும் குழந்தையாக இருந்தால், அவைகளைக் கண்டு மகிழ்பவர் யாவர் ? எல்லாம் வல்ல இறைவனும் இறைவியுமே அன்றோ ? அவர்கள் இப்போதும் நம்மைக் குழந்தைகளாகவே எண்ணி மகிழ்ந்து கொண்டு இருக்கிறார்கள். அன்றியும் குழந்தைப் பருவம் குழந்தைக்கு இன்பமா ? நமக்கு இன்பமா ? குழந்தைகள் சாதாரணமாகப் பெரியோர்ராக இருக்கவே விரும்பும். சின்னஞ் சிறு குழந்தைகளும் ஒரு பொம்மைக் குழந்தையை அன்றோ விரும்புகிறது ! அதனால் அந்தக் குழந்தைகள் வளர்ந்து பெரியோராகவே, அல்லும் பகலும் முயலுகின்றன ; பொருள்களையறிய ஆராய்ச்சி செய்கின்றன. மூன்று மாதக் குழந்தையும் தன் அறிவுக்கு ஏற்ற வகையில் ஆராய்ச்சி செய்ய முயலுகின்றது ; அதற்காகவே அழுகின்றது ; முயற்சி கை கூடினால் சிரிக்கின்றது. நாம் அதன் செயல்களைக் கண்டு களிக்கின்றோம்.

குழந்தையின் உள்ளம், ஓர் ஆராய்ச்சிக்காரனின் உள்ளம் என்றும் கூறலாம். அதற்கு ஒவ்வொரு நாளும் ஒரு புதிய பொருள் வேண்டும். அது அப்பொருளைப் பலவகையிலும் ஆராய்ச்சி செய்து பார்க்கும் ; ஆராய்ச்சி முடிந்தபின் அதனை வீசி எறிந்து விடும். குழந்தைகள் சிறிது நேரமேனும் சோம்பியிருப்பதில்லை. சாதிமத வேற்றுமைகளும் அவைகட்கு இல்லை. சிறு காக்கை குருவி யாவும் அவைகட்கு நண்பர்கள்.

கள்ள உள்ளம் சிறிதும் இல்லாத அக்குழந்தைகள் பின்னர் அழுக்காறு நிறைந்த தீய மனிதர்களாக மாறிவிடக் காரணம் என்ன ? எனச் சிலர் எண்ணலாம். குழந்தை உள்ளம் கள்ளம் கபடம் அற்றது

என்பது உண்மையே. ஆனால் அது கள்ளத்தின் இழிந்த நிலையினை எண்ணிப் பார்த்து அதனை விலக்கி விடவில்லை. கள்ளத்தனமாக நடப்பதற்கு வேண்டிய சிற்றறிவும் அதற்கு இல்லை. அறிவு வளர வளர, அது அக் குணங்களைக் கடைப் பிடிக்கின்றது. மிகவும் அறிவு முதிர்ந்த பெரியோராக விளங்கும்போது, அது ஆராய்ந்து பார்த்து அந்த இழி குணங்களை முற்றிலும் ஒழித்து விடுகிறது. குழந்தைகளின் உள்ளம் தூய்மையானதாகக் காணப்படுவதற்கு அக்குழந்தைகளின் அறியாமையே காரணமாகும். பெரியோர்களின் உள்ளமும் சின்னஞ்சிறு குழந்தைகளின் உள்ளமும் பொது வகையில் ஒன்றாகக் காணப்பட்டாலும் சிறப்பு வகையில் வேறுபடும். முன்னது அறிவு நிரம்பிய வெள்ளையுள்ளம்; பின்னது அறியாமை நிரம்பிய வெள்ளையுள்ளம். குழந்தைகளைப் போன்ற அறியாமை நிரம்பிய பெரிய மனிதர்களும் உண்டு; பெரியோர்களைப் போன்ற அறிவு நிரம்பிய குழந்தைகளும் உண்டு. ஞானசம்பந்தர் மூன்று வயதில் அற்புதங்கள் செய்தார். மெய்கண்டார் மூன்று வயதில் ஞான சாத்திரம் போதித்தார். அத்தகைய ஞானிகளின் உள்ளங்களை நம் போன்றவர்களால் அளவிட்டுக் கூற முடியாது.

கடவுளர்களையும், பெரியோர்களையும், குழந்தைப் பருவத்தினர்களாக மாற்றிப் பார்த்தலில் நம்மவர்க்குப் பெரிதும் விருப்பம். நம் நாட்டில் நிலவும் பிள்ளைத் தமிழ் நூல்களே இதற்குச் சான்று பகரும். பெரியோர்கள் ஒரு வகையில் குழந்தைகளாகவே மாறிவிடுகின்றனர். நாற்பது வயதுக்குமேல் நாய்க்குணம் என்பர்; ஆனால் அறுபது வயதுக்குமேல் அக்குணம் குழந்தைக்

குணமாக மாறுதலை நாம் கண்கூடாகப் பல பெரியோர் களிடம் காணலாம். குழந்தைகட்குக் கிழவரிடந்தான் அதிக ஆனந்தம். கிழவர்களும் தம் பெயரர் பெயர்த்தி மார்களிடமே அதிக அன்பினைக் காட்டுகின்றனர். காந்தி அடிகளார் முன்பு குழந்தைகட்கு ஓர் அழகான கடிதம் எழுதினர் அல்லவா? அக்கடிதத்தில் மிளிரும் குழந்தைத் தன்மையினை இன்று நினைத்துப் பார்த்தா லும் நமக்குள் மகிழ்ச்சி தோன்றவில்லையா? "ஆ! எனக்கு இறக்கை மட்டும் இருந்தால்" என்று எழுதிய அக்கடிதத்தில் குழந்தைத் தன்மைதான் காணப்படு கிறது.

என் ஆசிரியர் மணிதிருநாவுக்கரசு முதலியாரின் தந்தையாரை நான் ஒருமுறை "உங்களுக்கு இப்போது என்ன வயது" என வினவினேன். அவர் உடனே நிமிர்ந்து உட்கார்ந்து புன்னகை தவழ்ந்த தம் பொக்கை வாயினை ஆவலோடு திறந்து, 'நான் இப் போது பதினறு வயது பாலகுமாரன்'' என்று மார்பைத் தட்டிக் கொண்டு கூறினர். நான் உடனே "அஃ தெப்படி?'' என்றேன். அதற்கு அவர், ''மனித னுக்கு அறுபது வயதிற்கு மேல் குழந்தைப் பருவம் திரும்புகிறது: எனக்கு இப்போது எழுபத்தாறு; ஆதலால் நான் பதினறு வயது பாலகுமாரன்" என்ருர்.

அப்பெரியாரின் கொள்கைப்படி நம் திரு. வி. க. முதலியார் இப்பொழுது ஓராண்டு நிறைவுபெற இருக் கும் இளங்குழந்தையே ஆவர். இப்பொழுது நடை பெறுவது அக்குழந்தையின் முதல் ஆண்டு விழா.

அக்குழந்தையின் அழகு முதிர்ந்த இன்ப வடிவினைக் கண்டு மகிழ நாம் பெரிதும் அவாவுகின்றோம். அறிவு முதிர்ந்த அக்குழந்தையின் அமுதமொழியினைக் கேட்க நாம் ஆவல் கொண்டுள்ளோம். அவர்தம் தூய உள்ளம் என்றும் துகளின்றி மிளிர்வதாக! அவர்தம் குண நலன்கள் மேன்மேலும் ஓங்கி ஒளிர்வதாக! அவர்தம் எழில்' வாய்ந்த திருவதனம் என்றும் இளமையுடன் திகழ்வதாக! பல்லாண்டு பல்லாண்டு அவர்தம் திருப்பெயர் என்றும் பொன்னெழுத்துக் களால் பொலிவுறுவதாக! ஒப்புயர்வற்ற அவர்தம் கொள்கைகள் எங்கெங்கும் பரவி என்றென்றும் நிலவு வதாக! தமிழ்நாட்டுப் பெரியார் திரு. வி. கலியாண சுந்தர முதலியார் வாழ்க!

## (12)



# கவரிமா அன்னார்!

ஒரு நாள் காலை மணி எட்டு அல்லது ஒன்பது இருக்கலாம். ஓர் அறையிலே இரு நண்பர் ஏதோ சிறிது படிப்பதும் பேசுவதுமாக இருந்தனர். ஒருவர் தம் கையில் திருக்குறளை வைத்துக் கொண்டு புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தனர்; மற்றொருவர் அன்று காலை வெளிவந்த புதினத்தாளை மேல் நோக்காகப் பார்த்துப் படித்துக் கொண்டிருந்தனர்.

புத்தகத்தைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்த புனிதவேலனார் தம் நண்பராகிய தணிகைநாதரை நோக்கி, "இதோ இருக்கிறது பாருங்கள் அந்தத் திருக்குறட் பாடல்! தொண்ணூற்றேழாம் அதிகாரம் ஒன்பதாவது பாடல்" என்று சொல்லிக் கொண்டே அந்தப் பாடலைப் பெருமிதத்துடன் தம் நண்பருக்குப் படித்துக் காட்டினார்.

அந்தப் பாடல் வருமாறு:

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்"

பொருள்: தன் மயிர்த்திரளில் ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமாவை ஒப்பவர் உயிர் நீங்கத்

தக்க மானம் எய்தும் சமயம் வரின் உடனே உயிர் துறப்பர்.

**தணிகைநாதர் :** அப்படியானல் அந்தக் கடன்காரன் தற்கொலை புரிந்து கொண்டது நியாயம் என்று நீங்கள் சொல்லுகின்றீர்களா !

**புனிதவேலர் :** அதில் என்ன சந்தேகம் ! திருவள்ளுவர் அப்படித்தானே சொல்லுகிருர் ?

**நாதனுர் :** போமையா போம். திருவள்ளுவர் சொன்னல் என்ன? யார் சொன்னல் எனக்கென்ன? வந்ததை வைத்துக்கொண்டு ஒழுங்காகக் குடித்தனம் பண்ணுமல் ஊரெல்லாம் கடன் வாங்கிக் கொண்டு தற்கொலை பண்ணிக் கொண்டவன் பெரிய மானியா ? மானம் உடையவனுய் இருந்தால் முன்பே கடன் வாங்காமல் காலம் தள்ளமாட்டானு ?

**வேலனுர் :** ஆனல் திருவள்ளுவர் வாய்மொழி பொய்யா ?

**நாதனுர் :** அதை யார் பொய் என்று சொன்னுர் ? இவனுக்காகவா திருவள்ளுவர் இந்தப் பாட்டை எழுதி வைத்தார் ? மானமாக வாழ்ந்து எதிர்பாராத வகையில் தம் மானத்தை இழக்க நேரும் நிலையில் உள்ளோரைக் குறித்து வள்ளுவர் அவ்விதம் எழுதினுர் என்ருல் ஒரு வகையில் பொருந்தும்.

**வேலனுர் :** அப்படியானல் நன்ருகப் படித்து வந்த ஒரு கல்லூரி மாணவன் எதிர்பாராத வகையில் பட்டம் பெறத் தவறி விடுகின்ருன் என்று வைத்துக் கொண்டால் அவன் தன் மானத்தைக் காத்துக்கொள்ளத் தற்கொலை செய்து கொள்ளலாமா ?

**நாதனர் :** அந்த மாணவன் அவ்விதம் உயிர் துறந்தால் அவன் அறிவில்லாதவனே ஆவான். தேர்வில் வெற்றியும் தோல்வியும் இயல்பு. நன்ருகப் படித்து விளக்கமாக விடை எழுதுபவன் பட்டம் பெறுவான். அவ்விதம் புரியாதவன் பட்டம் பெறத் தவறிவிடுவான். நீங்கள் கூறும் மாணவன் ஒழுங்காகக் கற்று விளக்கமாக எழுதியும் பட்டம் பெருவிட்டால் அது தேர்வாளர் தவறே ஆகும். அதற்காக இவன் ஏன் தன் அருமையான உயிரை இழக்கவேண்டும்.

**வேலனர் :** நீங்கள் கூறுவதைப் பார்த்தால் எவனும் தன் உயிரைப் போக்கிக் கொள்ளக் கூடாது போல் தோன்றுகிறது. அவ்விதமானல் அந்தக் குறட்பாவே தவறு என்றுதான் சொல்ல வேண்டும்.

**நாதனர் :** உயிரைப் போக்கிக் கொள்ளுதற்கு எவருக்கும் உரிமையில்லை. அதனல் தானே அவ்விதம் புரிய முயல்வோரை அரசாங்கத்தார் தண்டிக்கின்றனர்? அரசாங்கம் மட்டும் அன்று; இறைவன் கூட விரும்புவதில்லை. "ஆதலால் அஞ்சுகின்றேன். அதுவும் நின் உடைமை அன்றே" என்று ஒரு பெரியார் தம் உயிரை மாய்த்துக் கொள்ளவும் இயலாமல் கடவுளை நோக்கிக் கூறியிருத்தல் நீங்கள் அறிந்தது தானே. வள்ளுவர் தற்கொலை புரிந்து கொள்ளும்படியாகவா கூறியிருக்கின்ருர். "உயிர்விடுவர் மானம்வரின்" என்பதற்குப் பொருள் அந்த உயிர் தானே உடலை விட்டு நீங்கிவிடும் என்பதே ஆகும். சிலப்பதிகாரத்திலே வரும் பாண்டியன் நெடுஞ்செழியனை நோக்குங்கள் ; அவன் பொற்கொல்லன் சொற்கேட்டுக் கோவலனைக் கொலை புரிந்

தான். இதை அறிந்த கண்ணகி தன் கணவன் கள்வன் அல்லன் என்பதை அந்த நெடுஞ்செழியன் எதிரில் தன் சிலம்பினை உடைத்துக் காட்டி நிலை நாட்டினாள். உடனே அந்தப் பாண்டியன்,

"பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன் ;
மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது கெடுகஎன் ஆயுள்என"

மயங்கி விழுந்தான் : அவன் உயிரும் அப்போதே அவன் உடலை விட்டு நீங்கியது.

**வேலனார் :** நீங்கள் கூறுவது ஒரு வகையில் பொருத்தமாகவே இருக்கிறது இதைப் பொது மக்களுக்கும் நன்கு விளக்கிச் சொல்லவேண்டும். நல்ல தங்கையின் கதையைக் கேட்டுத் தம் குழந்தைகளைக் கிணற்றில் போட்டுத் தாமும் உயிர் துறக்க எண்ணும் பெண்மணிகள் நாட்டில் இன்னும் பலர் உண்டு. திருவள்ளுவர் இதனை இன்னும் சிறிது விளக்கமாகக் கூறியிருக்கவேண்டும் .

**நாதனார் :** அவர் தாம் கவரிமா என்னும் விலங்கின் செயலால் நன்றாக விளக்கி இருக்கின்றாரே ! அது தூக்குப் போட்டுக் கொண்டோ, கிணற்றில் குளத்தில் விழுந்தோ செத்துப் போனதாக நாம் இதுவரையில் கேட்டதில்லை.

**வேலனார் :** பாண்டியன் நெடுஞ்செழியனைப் போல் அது தன் உடலில் உள்ள மயிரில் ஒரு சிறிது நீங்கிய உடனே நிலத்தில் விழுந்து உயிரை விட்டுவிடுவதாக உங்களால் கூற முடியுமா ?

**நாதனர் :** அதை என்னல் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஒன்று இரண்டு அவ்விதமும் செய்யலாம். மற்றவை தம் உடம்பின் அழகு அதனல் சீர்குலைந்து விட்டதே என்று எண்ணி வருந்தி வருந்தித் தம் உடலை அறவே வெறுத்து உண்ணுதலும் உறங்குதலும் புரியாது இளைத்து முடிவில் இறந்துபடும் என்று நம்புதற்கு அந்தக் குறள் இடங்கொடுக்கிறது.

**வேலனர் :** அது தற்கொலையாகாதா ?

**நாதனர் :** அஃதும் ஒருவகையில் தற்கொலைதான் ஆனல் அத்தகைய உள்ள உறுதி உடையவர் உடல் பொருள், ஆவி எல்லாவற்றையும் அறவே துறக்கக் கூடிய பெரிய ஞானியாகத் தான் இருக்கவேண்டும். அவ்விதம் புரிபவரை நான் இதுவரையில் நேரில் கண்டதில்லை. சங்க நூல்களில் வடக்கிருந்து உயிர் துறத்தல் என்பது இதனையே குறிக்கிறது. இஃது என்ன எளிமையான செயலா ? மானத்தைப் பெரிதாக எண்ணும் பேரறிஞர்கள்—தம் உடலைத் துரும்பாகக் கருதும் வீரர்கள் சிறந்த தியாகிகள் ஆகிய இத்தகைய பெரியோர்களால் தான் இது முடியும். பெருஞ்சேரலாதன் என்னும் சேர அரசன் தனக்குப் போரின்கண் நேர்ந்த புறப்புண்ணிற்காகத் தன் உடலை வெறுத்து வடக்கிருந்து உயிர் துறந்தனன். கோப் பெருஞ் சோழன் தன்னைப் பகைத் தெழுந்த மைந்தர்கட்குப் புலவர்கள் சொற்படி அரசினைத் தந்து வாழ்க்கையில் வெறுப்புற்று வடக்கிருந்து உயிர் துறந்தனன். மானமே பெரிதாக உடைய இத்தகைய வீரர்களை நோக்கியே திருவள்ளுவர் பாராட்டிக் கூறுகின்றரே

ஒழியக் கடன் காரணமாகவோ, முன் கோபத்தாலோ, பிணியின் கொடுமையாலோ மற்றும் பல்வேறு காரணங்களாலோ தற்கொலை புரிந்து கொள்ள முயல் பவர்களை வள்ளுவர் பாராட்டவேயில்லை.

**வேலனார் :** மானம் என்பதின் பொருள் எனக்கு இப்போதுதான் நன்கு விளங்குகின்றது.

**நாதனார் :** மானம் அழிந்த பின் உயிர் விடுதலை விட மானம் அழியாதிருக்க முயலுதலே சிறந்தது என் பதை விளக்கிக் காட்டுதற்காகவே வள்ளுவர் மானம் என்னும் மாண்புடை அதிகாரத்தை வகுத்துக் கூறி யிருக்கின்றார். உயிரைப் போக்கிக் கொள்ளுதல் வேண்டும் என்பது அவர் கருத்தன்று. இவ்விதமே திருக்குறளிலே நமக்கு முரண்பாடு போல் தோன்றும் பல பகுதிகளை நாம் பன்முறை ஊன்றிக் கவனித்தல் வேண்டும்.

இவ்விதம் அவர்கள் பலப்பல பேசி அன்றைய ஓய்வு நாளினைக் கழித்தனர்.

❋

(13)

# நான் கண்ட மறைமலையடிகள்

சுமார் 50-ஆண்டுகளுக்கு முன்பு நானும் என் நண்பர்களுள் ஒரு சிலரும் சேர்ந்து சென்னையிலே பாலசைவ சபை என்னும் கழகம் ஒன்றினை ஏற்படுத்தினோம். அதன் மூலமாகத்தான் என் ஆசிரியர் மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்களின் தொடர்பு எனக்கு ஏற்பட்டது, அவர் அப்போது மறைமலை அடிகளாரிடம் பாடம் கேட்டுக் கொண்டிருந்தபடியால் அவர் மூலமாக நானும் மறைமலை அடிகளாரிடம் தொடர்பு கொள்ளும் ஓர் அரிய பேற்றினைப் பெற்றேன். அப்போது அவர் நாகை. வேதாசலம் பிள்ளை என்னும் பெயருடன்தான் இருந்தார் என்றாலும் அவர் அடிகளாராக ஆகுதற்கு உரிய தகுதிகளையெல்லாம் உடையவர் என்பதை அப்போதே அவருடைய தோற்றப் பொலிவு எங்களுக்குப் பளிங்குபோல் விளக்கிக் காட்டியது. குழந்தை போன்ற தூய்மையான உள்ளமும் இனிமையான பேச்சும் உடைய அந்தப் பேரறிஞரைக் கண்டவுடனே நான் பெரிதும் வியப்பே அடைந்தேன்.

அந்தக் காலத் தமிழ்ப் புலவர்கள் பெரும்பாலும் புராணப் பிரசங்கமே செய்வார்கள். அவர்கள் அவையடக்கத்திற்கே அரைமணி நேரம் எடுத்துக் கொள்வார்கள். பேசும்போதும் கிளைக்கதைகளும், புராணப் பாடல்களுமே அவர்கள் பேச்சில் கலந்திருக்கும். மறைமலை அடிகளார் அவர்கள் பேச்சோ அந்தக் காலத்திலேயே ஆங்கிலேயர் முறையைப் பின்பற்றியதாகவே இருக்கும்.

தாம் பேச எடுத்துக்கொண்ட பொருளைப் பேச வேண்டிய காலத்திற்குத் தக்க வண்ணம் பகுதி பகுதியாக வகுத்துக்கொண்டு கேட்போர் உள்ளத்தைப் பிணிக்கும் தன்மையில் பலப்பல எடுத்துக் காட்டுக்களுடன் விளக்கிக் கூறி முடிவில் தாம் பேசிய பேச்சின் சுருக்கத்தினையும் தொகுத்துக்கூறி முடிப்பது அந்தக் காலத்திலே எங்களுக்கெல்லாம் மிகவும் புதுமையாகவே இருந்தது. அவர் தம் பேச்சில் சிவஞானபோதக் கருத்துக்கள், மேல் நாட்டவரின் எண்ணங்கள், சங்க கால நூற்களில் மிளிரும் தமிழர் பண்பாடுகள், வட மொழியில் உள்ள உபநிடதப் பொருள்கள் யாவும் கலந்திருக்கும். அவர் தம் பேச்சுக்களைக் கேட்டே பல புலவர்கள் தங்கள் பேச்சினை மாற்றிக் கொண்டார்கள். அழகிய செந்தமிழ் நடையில் கட்டுரை எழுதுவதற்கு வழிகாட்டியாக இருந்தவரும் அவரேயாவார். அவர் நடத்திக் காட்டிய சைவ சித்தாந்த சமாசத்தைப் பின்பற்றியே பல அறிஞர்கள் சபைகளையும் கழகங்களையும் மேல் நாட்டுமுறைப்படி சட்டதிட்டங்களோடு நடத்தத் துவங்கினர். இன்னும் அவரைப்பற்றி விரிவாகக் கூற

வேண்டுமானால் இந்தக் கட்டுரையே பெரிதும் நீண்டு விடும்.

இக்காலச் சீர்திருத்தத்திற்கு அடிகோலியவர் நம் அடிகளாரே ஆவர். "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்," என்னும் கொள்கையைச் சமயச் சொற்பொழிவுகளில் சிறிதும் அஞ்சாது பேசியும், ஞானசாகரம் என்னும் உயரிய திங்கள் இதழ் மூலம் பலப்பல கட்டுரைகள் எழுதியும் நிலைநாட்டியவர் நம் அடிகளே ஆவர்.

இத்தகைய சிறந்த பேரறிஞருக்கு உலக இயல்பு சிறிதும் தெரியவராது. யார் என்ன கூறினாலும் அப்படியே நம்பிவிடுவார். எல்லோரையும் தம்மைப் போலவே கள்ளங்கபடம் அற்றவர்களாக எண்ணி அவர் பலமுறை ஏமாறிப் போயிருக்கின்றார்.

நான் அவருக்கு அறிமுகமான சம்பவத்தைக் கூறினாலே மிகவும் சுவையாக இருக்கும். நமது அடிகளார் சென்னையிலிருந்து பல்லாவரத்துக்குப் போன சமயம், நான் சொல்லப்போகும் நிகழ்ச்சி நிகழ்ந்த சமயமாகும். அன்று ஞாயிற்றுக்கிழமை, காலை 7 அல்லது 8–மணி இருக்கலாம். நம் அடிகளார் கையிலே ஒரு சிறு காகிதத்தோடு எங்கள் ஆசிரியர் இல்லத்திற்குத் திடீரென்று வந்தார். அப்போது எங்கள் ஆசிரியர் கால் சுளுக்கினால் எழுந்து நடக்க இயலாத நிலையிலே இருந்தார். அடிகளார் அதைக்கூடச் சரியாகக் கவனிக்காமல், "திருநாவுக்கரசு! இந்தப் பட்டியில் உள்ள பொருள்களையெல்லாம் உடனே வாங்கிக்கொண்டு வந்து பல்லாவரத்திலுள்ள என்வீட்டில் சேர்த்துவிட வேண்டும். நான் அவசரமாகப் போகிறேன்," என்று சொல்லிவிட்டு அதற்கு வேண்டிய பணத்தையும் அவரிடம் கொடுத்து விட்டுச் சென்று விட்டார். நான் அப்போது

தான் எங்கள் வீட்டுக்குச் சென்று திரும்பி வந்தேன். எங்கள் ஆசிரியர், மறைமலை அடிகள் வந்து சென்றதைக்கூறிக் காகிதத்தில் குறித்துள்ள பொருள்களை உடனே கொத்தவால் சாவடிக்குச் சென்று வாங்கிக் கொண்டு பல்லாவரத்தில் உள்ள அவர் வீட்டில் கொடுக்க வேண்டும்; என்னாலோ ஓர் அடியும் எடுத்து வைக்க இயலாது. என்ன செய்வது? என்றார். நான் அப்போது, "நீங்கள் ஏன் இதை அவரிடம் நேரில் தெரிவிக்கக்கூடாது?" என்றேன். எங்கள் ஆசிரியர், "பெரியவராகிய அவர் கூறினால் அதை எப்படி என்னால் மறுத்துக் கூற இயலும்? நான் அவரைக் கண்டதும் என் நோயையும் பொருட்படுத்தாமல் எழுந்து நின்றேன். அதனால் அவர் நான் நல்ல நிலையில் இருப்பதாகவே எண்ணிக் கொண்டு இதைக் கொடுத்து விட்டுச் சென்றார். நீயும் என் தம்பி இராஜரத்தினமுமாகக் கொத்தவால் சாவடிக்குச் சென்று அந்தப் பொருள்களையெல்லாம் வாங்கிக் கொண்டு நேராகப் பல்லாவரம் சென்று அவரிடம் கொடுத்து விட்டு வரவேண்டும்,'' என்று கூறினார். எனக்கும் அவர் தம்பிக்கும் அரிசி விலை, புளி விலை கூடத்தெரியாது. நாங்கள் கடைக்குச் சென்று காய்கறி கூட வாங்கியதில்லை. அவ்விதமிருந்தும் எங்கள் ஆசிரியர் சொல்லைத் தட்டி நடப்பதற்கு எண்ணாமல் நாங்கள் இருவரும் அவர் குறிப்பிட்ட கடைக்குச் சென்று மறைமலை அடிகளார் தந்த பொருட்பட்டியையும் பணத்தையும் கடைக்காரனிடம் தந்தோம்.

அந்தப் பட்டி அச்சுப் போன்ற எழுத்துக்களால் மிக அழகாக எழுதப்பட்டிருந்தது. சர்க்கரை, சோப்புப்

பெட்டி, வாதுமைக் கொட்டை, கோதுமை மா முதலிய பலபொருள்கள் அந்தப்பட்டியில் குறிக்கப்பட்டிருந்தன. உலக அனுபவமில்லாத நாங்கள் கையிலே ஒரு கூடையைக்கூட எடுத்துச் செல்லவில்லை. ஆதலால் எங்கள் மேல் துண்டினையே கடைக்காரனிடம் கொடுக்க நேர்ந்தது. இரண்டு துண்டுகளிலும் அந்தக் கடைக்காரன் பல பொருள்களை வைத்து இரண்டு மூட்டைகளாகக் கட்டி எங்களிடம் கொடுத்தான். அந்த இரண்டு மூட்டைகளையும் நாங்கள் எங்கள் தோள் மீது வைத்துச் சுமந்து கொண்டு இரயில் நிலையத்தை அடைந்தோம். அங்கிருந்து பல்லாவரம் இரயில் நிலையத்தை அடைவதற்குள் பகல் 12-மணி ஆகிவிட்டது. நாங்கள் அன்று காலையில் வழக்கமாக அருந்தும் சிற்றுண்டியைக்கூட உட்கொள்ளவில்லை. அடிகளார் வீடு இரயில் நிலையத்திற்கு அண்மையில் இருந்தும் இடம் தெரியாமையால் சுற்றி அலைந்து பகல் ஒரு மணிக்கு அடிகளார் இல்லத்தை நாங்கள் அடைந்தோம்.

எங்கள் ஆசிரியர் வர இயலாத நிலையை எடுத்துச் சொல்லி அதனால் எங்களை அனுப்பினார் என்பதையும் விளக்கிக் கூறினோம். ஆனால் நாங்கள் இன்னார் என்று அவரிடம் சொல்லவில்லை. ஆதலால் அவர் எங்களை வேலையாட்கள் என்று எண்ணிக் கொண்டிருக்க வேண்டும். வெயிலின் கொடுமையால் எங்கள் உடம்பு வியர்த்திருந்ததும் உடம்பில் மேல் துண்டும் இல்லாமல் நாங்கள் இருந்ததும் அவர் எங்களை வேலையாட்களாக எண்ணுவதற்கு இடம் தந்தன. அதனால் அவர் எங்களை உட்காருங்கள் என்று கூடச் சொல்லவில்லை. நாங்கள் அந்த இரண்டு மூட்டை

களையும் அவிழ்த்து அவற்றில் இருந்த பொருள்களை யெல்லாம் அவர்முன் வைத்தோம். அவரும் அந்தப் பட்டியில் உள்ளபடி பொருள்கள் சரியாக இருக்கின்றனவா என்று எண்ணிப் பார்த்து அந்தப் பொருள்களைப் பெற்றுக் கொண்டார். முதலில் சோப்புப் பெட்டியை எடுத்தார். அந்தப் பெட்டியின்மேல் எழுதியிருந்தவைகளையெல்லாம் நன்ருகப் படித்துக் கொண்டார். பிறகு அந்தப் பெட்டிக்குள் இருந்த அச்சிட்ட காகிதக் குறிப்பை எடுத்தார். அதையும் கூர்ந்து பார்த்து அதில் எழுதியுள்ளவைகளைப் படித்துக்கொண்டார். இவ்விதம் அவர் ஒவ்வொரு பொருளாக எடுத்துக் கூர்ந்து பார்த்து அவைகளின் குணநலன்களை அறிந்து கொண்டு எங்களை அனுப்புவதற்குள் மணி 1-30 ஆகி விட்டது. எங்களுக்கோ நல்ல பசி. அந்தக் காலத்தில் இப்போதைப் போன்ற ஓட்டல்கள் இல்லை. எங்கள் ஆசிரியர் அவருடைய குணநலனைக் குறித்து மிக அதிகமாக எங்களிடம் கூறியிருந்தார். ஆனால் அவரோ எங்களைப் பற்றி ஒன்றுமே கேட்கவில்லை. நாங்கள் மிகவும் தயக்கத்தோடு அவர் வீட்டை விட்டுச் சில அடிகள் நடந்தோம். உடனே அடிகளார் வெளியே வந்து கை தட்டி எங்களை அழைத்தார். ‘உணவு உட்கொண்டு சிறிது இளைப்பாறிச் செல்லுங்கள்’ என்று சொல்லுவதற்காக எங்களை அழைத்தார். என்று நாங்கள் எண்ணினோம். மறுபடியும் உள்ளே சென்றதும் நாங்கள் கடையில் வாங்கி வந்த சர்க்கரை கோதுமை போன்ற பொட்டணங்களை எங்கள் முன்னிலையிலே அவிழ்த்தார். பிறகு தராசு, அரைப்படி, கால்படி முதலியவைகளையும் பலம் வீசை முதலியன குறிக்கப்

பெற்ற நிறுத்தலளவைகளையும் வைத்துக்கொண்டு அவைகளை ஒவ்வொன்றாக நிறுத்துப் பார்த்து முடிவில் 'எல்லாம் சரியாக இருக்கின்றன நீங்கள் போகலாம்' என்றார். அந்தச் செயல் எங்களுக்கு மேலும் ஏமாற்றத்தையே அளித்தது. பிறகு எவ்விதமோ வீடு வந்து சேர்ந்து அடிகளாரின் செயல்களை எங்கள் ஆசிரியரிடம் கூறினோம். அப்போதும் அவர் அடிகளாரைப் பற்றி உயர்வாகவே கூறினார். அடிகளாருக்கு உலக இயல் தெரியாததே காரணம் என்றும் உங்களை யாரோ அயலார் என்று எண்ணிக் கொண்டார் என்றும் நீங்கள் உங்களைப் பற்றித் தெரிவித்துக் கொள்ளாததனால் தான் இத்தகைய தவறு நேர்ந்தது என்றும் அவர் கூறினார்.

இரண்டொரு நாட்களுக்குள் எங்கள் ஆசிரியரின் கால் நோய் குணமடைந்து விட்டது. அவர் உடனே பல்லாவரம் சென்று "இரண்டு படித்த புலவர்கள் நல்ல வெயிலில் உங்களுக்காக இரண்டு மூட்டைகளைச் சுமந்து கொண்டு வந்தால் அவர்களை இவ்விதம் நீங்கள் மரியாதைக் குறைவாக நடத்தலாமா?" என்றுமிகத் தைரியமாகக் கூறினார்.

எங்கள் ஆசிரியர் சொன்ன சொற்கள் அவர் உள்ளத்தைப் பெரிதும் வருத்தி விட்டன. அவர் பெரிதும் வருந்தினார். "நான் என்ன தவறு செய்துவிட்டேன். திருநாவுக்கரசு! அந்த இரண்டு இளைஞர்களையும் உடனே அனுப்பிவை. அவர்களுக்கு நான் ஆறுதல் உரைகூறி அவர்களை மகிழ்விக்கவேண்டும்," என்றாராம். எங்கள் ஆசிரியர் அடுத்த நாளே வேறு ஒரு காரணத்

தைக்கூறி இரண்டு புத்தகங்களை எங்களிடம் கொடுத்து, "இவை அடிகளாருக்கு அவசியம் வேண்டுமாம்; உங்கள் இருவரையும் நேரில் கண்டு பேச வேண்டும் என்று கூட விரும்புகின்றார். ஆதலால் நீங்கள் இருவரும் எனக்காகவேனும் சென்று வருதல் வேண்டும்," என்று தெரிவித்தார். எங்கள் ஆசிரியரின் சொல்லைத் தட்டுவதற்கு எண்ணமல் நாங்கள் அவ்விதமே சென்றோம். அப்போது மாலை நேரம். எங்களைக் கண்டதும் அடிகளார் மிகவும் அருமையோடு பெயர் சொல்லி அழைத்துத் தம் அருகே உட்கார வைத்துக் கொண்டு ஏதேதோ பேச ஆரம்பித்தார். உடனே அவர்தம் வாழ்க்கைத் துணைவியாரை அழைத்து எங்களுக்குச் சிற்றுண்டி பரிமாறினர். அன்று இரவும் நாங்கள் அங்கேயே இருக்க வேண்டும் என்று எங்களை வற்புறுத்தினர். தாம் பழக்கமாகப் புரியும் யோகப் பயிற்சி, முதலியவைகளையெல்லாம் எங்களுக்கு விளக்கிக் கூறி நேரில் செய்து காட்டினர். அன்று இரவு நர்ங்கள் உணவு கொள்ளும் போது அவரே அருகிருந்து அந்தக் கறிவகைகளின் சிறப்புக்களையெல்லாம் எங்களுக்கு விளக்கிக் கூறினர். அந்தக் கறி வகைகள் நல்ல நெய்யினால் தாளிக்கப் பெற்றிருந்தன. எலுமிச்சம் பழத்தின் சாற்றினால் குழம்பு இரசம் முதலியவை தயாரிக்கப் பெற்றிருந்தன. அன்று இரவெல்லாம் நாங்கள் உறங்கவேயில்லை. இரவு 12 மணிக்கு மேல் அவர் உலாவச் சென்றார். அப்போது கூட அவர் எங்களையும் அழைத்துச் சென்றார்.

அன்றைய தினத்திலிருந்து இறுதிக்காலம் வரையிலே அவர் என்னிடம் காட்டி வந்த பேரன்பினை நான்

எவ்விதம் விளக்கிக் கூறுவேன். எங்கள் ஆசிரியர் இறந்த பின்பும் அவர் ஒருநாள் என்னையும் பாரிப்பாக் கம் கண்ணப்ப முதலியார் அவர்களையும் தம் இல்லத்துக்கு அழைத்துச் சென்று, ''திருநாவுக்கரசு இறந்ததற்காக நீங்கள் வருந்தவேண்டாம்; நான் இருக்கின்றேன். உங்களுக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் நான் செய்வேன். உங்களுக்கு 'என்ன வேண்டுமானாலும் என்னிடம் சொல்லுங்கள்,'' என்று கூறினார். "நீங்கள் எழுதும் புத்தகங்களை நீங்களே அச்சிட்டு விற்க முயலுங்கள். முதன் முதலில் நான் என் நூலை அச்சிட முயன்றபோது என்னிடம் போதிய பொருளே இல்லை. கிறித்தவக் கல்லூரியிலே கிடைத்த அந்தக் குறைந்த ஊதியத்திலும் சிறிதுசிறிதாகச் சேமித்துப் பகுதி பகுதியாக அச்சிட்டு முடிவில் முழு நூலாக ஆக்கினேன்," - என்றெல்லாம் அவர் மிக விரிவாகக் கூறினார். அவர் சங்க நூல்களையும் ஆங்கில நூல்களையும் நெட்டுருப் போட்ட செய்திகளையெல்லாம் கூட எங்களுக்கு விளக்கமாகக் கூறியிருக்கின்றார். அவர் இறப்பதற்கு ஒரு வாரம் இருக்கும் போது என் தமக்கையார் மலர்முகத்தம்மையாரும், டாக்டர் தருமாம்பாள் அம்மையாரும் அவர்களைக் காணச் சென்றார்கள். அந்த நிலையிலே கூட, ''முத்துக்குமாரசாமி எங்கே வருவதே இல்லை! நான் அவரைப் பார்க்க வேண்டும். உடனே வரச் சொல்லுங்கள்!" என்று கூறினாராம். அவ்வளவு சீக்கிரத்தில் அவர் எங்களையெல்லாம் விட்டு மறைந்து விடுவார் என்று நான் சிறிதும் எண்ணவே இல்லை. தாம் நெடுங்காலம் இவ்வுலகில் இருந்து மேலும் பலப்பல அரிய செய்திகளையெல்லாம் உல

குக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்று எண்ணியிருந்தார். தமிழர்களுக்குத் தமிழின் மீதோ தமிழ்ப் புலவர்களின் மீதோ, தமிழ் நாட்டின் மீதோ சிறிதும் கவலை இல்லையே என்று அவர் எண்ணி வருந்திய நாட்களும் உண்டு. அடிகளார் என்னைப் பலமுறை அழைத்தும் நான் அவரிடம் நெருங்கிப் பழகாமல் சிறிது தொலைவாகவே இருந்து வந்தேன். அதற்குக் காரணம் அவர்மீது எனக்கிருந்த ஒரு வகை அச்சமே ஆகும். திருவள்ளுவர் நினைவு நாள் விழாவுக்காகவும், தமிழர் திருமண மா நாட்டுக்காகவும் நான் சென்றிருந்தபோது, மரணத்தின் பின் மனிதர் நிலையைக் குறித்தும் வடமொழியினால் தமிழ் கெட்டு அழிவதைக் குறித்தும் மிக விரிவாக என்னிடம் பேசினார். அத்தகைய ஓர் பேரறிஞர், சிந்தனைச் சிற்பி, செந்தமிழ்க்கடல், நடமாடும் கலைக்களஞ்சியம் இவ்வுலகை விட்டு மறையும் தறுவாயிலேதான் நான் இறுதியாகச் சென்றேன். அப்போது நான் அவருடைய கையைப் பிடித்தேன்.

பேச்சிழந்திருந்த அந்த நிலையிலும் அவர் தம் கையினால் இறுகப் பிடித்துக்கொண்டார். அடிகளார் மறைந்த போது அந்தப் பல்லவபுரமே ஒளியிழந்து காணப்பட்டது. புலவர்கள் எல்லாம் அழுதனர்; கண்ணீர் விட்டுக் கதறினர். தாய்மார்களும் குழந்தைகளும் தேம்பித் தேம்பி அழுதனர். அந்த நிலையில் என் கல்நெஞ்சமும் கரைந்து விட்டது. எத்தனையோ அறிஞர்களை நம் தமிழ் மக்கள் இழந்திருக்கின்றார்கள். இருந்தாலும் பிறகு தோன்றிய மாபெரும் புலவர்கள் அந்த இழப்பை ஈடுசெய்து விட்டனர். நம் மறைமலை அடிகளோ அத்தகையவரல்லர். அவருடைய இடத்தை

நிரப்ப எத்தகைய பேரறிஞராலும் இயலாது. அவர் இயற்றிய நூல்களே என்றும் நிலைத்து நிற்கக்கூடிய பொன்றுப் புகழ் வாய்ந்த கருவூலமாகத் திகழ்கின்றன. அந்நூல்கள் அவர்தம் திருப்பெயரை என்றென்றும் அழியாமல் காக்க வல்லன. மறைமலை அடிகளார் திருப்பெயர் என்றும் நின்று நிலவத் தமிழர்கள் அந்நூற்களைப் போற்றிப் பாதுகாத்துப் பயனுறு வார்களாக.

# (14)

# தேவாரமும் ஓர் இலக்கியமே

'தமிழ்மறை' என்றும், 'மூவர்தமிழ்' என்றும் சிறப்பித்துச் சொல்லப்படும் தேவாரத் திருமுறைகளைத் தோத்திர நூலாகக்கொண்டு இறைவழிபாட்டுக்குப் பயன்படுத்துவதைத் தமிழ் மக்கள் அனைவரும் நன்கு அறிவர். இந்தத் தமிழ்மறையைப் பழைய பண் முறைகளுக்கேற்ப இக்கால இன்னிசைகளோடு சைவ மெய்யன்பர்கள் திருக்கோயில்களிலும், பொதுமேடைகளிலும் உருக்கத்தோடு பாடி வருவதையும் நாம் நேரில் காண்கின்றோம். எனினும் அந்தத் திருமுறைகளை இலக்கிய நூல்போல் எண்ணிப் பொருளுணர்ந்து படித்து மகிழும் பழக்கத்தினையுடையார் நம் நாட்டில் மிகவும் அருமையாகவே காணப்படுகின்றனர். தேவாரத் திருமுறைகளில் உள்ள எல்லாப் பாடல்களையும் படித்துப் பொருள் உணர்தல் அரிதாயிருப்பினும் குறைந்த கல்வி அறிவுடைய பொதுமக்களும் பொருளுணர்ந்து இன்புறத் தக்க பல பாடல்களும் அவற்றில் உள்ளன.

"அப்பன் நீ அம்மை நீ அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்னும் முதலடியையுடைய நாவரசர்

பாடலையும் “ மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு ” என்பது போன்ற சம்பந்தர் பாடலையும், “ வாழ் வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்” என்னும் அடியையுடைய சுந்தரர் பாடலையும் எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

சங்க இலக்கியங்களையும் பிற்காலக் காவியங்களை யும் கற்று மகிழ விரும்பும் தமிழ் இளைஞர்களுக்கும் இந்தத் தமிழ்மறை ஒரு சிறந்த வழி காட்டியாக இருத்த லைப் பலர் எண்ணிப் பார்த்துப் பயன் அடைய விழையா மலிருப்பது பெரிதும் வருந்தத் தக்கதேயாகும். சங்க நூல்களிலே காணப்படும் இயற்கை நவிற்சி போன்ற அணிகளும், இந்தத் தமிழ் மறையில் பல இடங்களி லும் அமைந்து இருத்தலைத் தமிழ் இளைஞர்கள் படித் துப் பயனடைதல் வேண்டும் என்ற எண்ணத்தாலேயே இக்கட்டுரை எழுதப்படுகிறது.

பத்தாம் நூற்றுண்டினர் என்று ஆராய்ச்சியாளர் களால் கருதப்படும் திருத்தக்கதேவர் இயற்றியுள்ள சீவக சிந்தாமணியில் காணப்படும்,

“ காய்மாண்ட தெங்கின் பழம்வீழக்
கமுகின் நெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி
வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப்
பழங்கள் சிந்தும்
ஏமாங் கதம்என் றிசை யாற்றிசை
போய துண்டே” (காம. பா. 2.)

என்னும் செய்யுளில் அமைந்த இதே கருத்தினை இவருக்கு முற்காலத்தவர் என்று சொல்லப்படும் ஞான

சம்பந்தர் திருவைகாவூர் என்னும் திருப்பதியில் உள்ள இறைவனைப் பாடும் முதற்பதிகத்திலே,

"தாழையிள நீர்முதிய காய்கமுகின்
வீழநிரை தாறுசிதறி
வாழையுதிர் வீழ்கனிகள் ஊறிவயல்
சேறுசெயும் வைகாவிலே"

என்று பாடியிருக்கின்றார்.

யார் எவர் பாடலைப் பார்த்துப் பாடியிருத்தல் கூடும் என்னும் ஆராய்ச்சியில் இங்கே நான் இறங்க விழையவில்லை. எனினும், தேவாரத் திருமுறையிலும் இலக்கியச் சுவையுண்டு என்பதைத் தெரிவிக்கவே இதைத் தமிழ் இளைஞர்களுக்கு நினைப்பூட்டுகிறேன்.

"தென்னை மரத்தில் உள்ள தேங்காய் பழுத்துப் பாக்கு மரத்தின்மீது விழுகிறது. பாக்கு மரத்தில் உள்ள பழுத்த பாக்குகள் சிதறி வாழைக்குலையின் மீது விழுகின்றன. வாழைக்குலையில் உள்ள பழுத்த பழங்கள் வயலில் விழ, இந்த மூவகைப் பழங்களின் சாறுகள் வயலில் உள்ள புழுதியைச் சேறுபடுத்துகின்றன என்னும் கருத்து இரண்டு பாட்ல்களிலும் அமைந்திருத்தலைக் கண்டு தமிழ் இளைஞர்கள் இன்புறலாம்.

கம்ப நாட்டாழ்வார் என்று சிறப்பித்துச் சொல்லப்படும் கவியரசராய்த் திகழ்ந்த கம்பர் பன்னிரண்டாம் நூற்றாண்டினர் என்பதும், அவர் பிறந்த ஊர் திருவழுந்தூர் என்பதும் ஆராய்ச்சியாளர்கள் பலராலும் ஒப்பமுடிந்த உண்மைச் செய்தியாகும். ஞானசம்பந்தர் காலத்தை ஆராய்ச்சியாளர்கள் ஏழாம் நூற்றாண்டு என்று தக்க ஆதாரங்களுடன் நிலைநாட்டியுள்ளனர்.

அந்த ஞானசம்பந்தர் கம்பர் பிறந்த ஊராகிய திருவழுந்தூரிலே எழுந்தருளியுள்ள இறைவனைப் பாடும் பத்துப் பதிகங்களுள் இரண்டொன்றைப் படித்துப்பார்த்தல் நலம் என்று நான் எண்ணுகின்றேன்.

அவை வருமாறு :

"கடலே றியநஞ் சமுதுண் டவனே
உடலே உயிரே உணர்வே எழிலே
அடலே றுடையாய் அழுந்தை மறையோர்
விடலே தொழமா மடமே வினையே."

"தடுமா றுவல்லாய் தலைவா மதியம்
சுடுமா றுவல்லாய் சுடரார் சடையில்
அடுமா றுவல்லாய் அழுந்தை மறையோர்
நெடுமா நகர்கை தொழநின் றனையே."

கவியரசராய கம்பர் இதே பொருளில் பாடாவிட்டாலும் இதே சந்த அமைப்பில் சீதை அசோக வனத்தில் துயர் ஆற்ருது புலம்புவதாகப் பாடும் பாடல்களுள் இரண்டொன்றையேனும் ஒப்பிட்டுப் பார்த்து நாம் மகிழ்ச்சியுறலாம்.

"கல்லா மதியே ! கதிர்வாள் நிலவே
செல்லா இரவே சிறுகா இருளே
எல்லாம் எனையே முனிவீர் நினையா
வில்லா ளனையா தும்விளித் திலிரோ !"

"பேணும் உணர்வே உயிரே பெருநாள்
நாணின் றுழல்வீர் தனிநா யகனைக்
காணும் துணையும் கழிவீர் அலிர்நான்
பூணும் பழியோ டுபொருந் துவதோ."

பதினேராம் நூற்ருண்டு என்று ஆராய்ச்சியாளர் கூறும் தெய்வச்சேக்கிழார் அடிகளும் எறிபத்த நாயனர்

புராணத்தில் இதே சந்த அமைப்பில் எறிபத்த நாயனார் இறைவனை நோக்கி வருந்தும் பகுதியில் ஐந்து பாடல்கள் அமைத்திருக்கின்றார். இரண்டொன்று வருமாறு :

"களியானையின்ஈர் உரியாய் சிவதா
எளியார் வலியாம் இறைவா சிவதா
அளியார் அடியார் அறிவே சிவதா
தெளிவார் அமுதே சிவதா சிவதா"

"ஆறும் மதியும் அணியும் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதோ
வேறும் நினைவார் புரம்வெந் தவியச்
சீறும் சிலையாய் சிவதா சிவதா."

தேவாரத்தில் வரும் பலப்பல சீர் அமைப்புகளையும், சந்த அமைப்பினையும் சேக்கிழாரும், கம்பரும் பிற ஆசிரியர்களும் எடுத்தாண்டிருப்பதைத் தமிழ் இளைஞர்கள் ஒப்பிட்டுப் பார்த்து மகிழலாம்.

தேவாரத் திருமுறைகளில் காணப்பெறும் அழகிய வர்ணனைகளையும், அரிய கருத்துக்களையும் இந்தச் சிறிய கட்டுரையில் எடுத்துக்காட்டுதல் சிறிதும் இயலாத செயலே ஆகும்.

தேவார ஆசிரியர்கள் தம் பாடல்களில் வெறும் வர்ணனைகளை மட்டும் அமைத்துப் பாடாமல் அந்த வர்ணனையுள்ளும், உள்ளுறை உவமம், இறைச்சி முதலிய தொனிப்பொருள் அமையப் பாடுதலே அவர்கள் இயல்பு. எடுத்துக்காட்டாக ஒன்றைப் பார்க்கலாம். திருமுது குன்றக்காட்டில் வாழும் வேடர்கள் மான், மயில் முதலிய உயிர்களைக் கொன்று தின்று வாழ்க்கை நடத்துவார்கள். அவர்கள் பகலெல்லாம் வேட்டை

யாடித் தம் ஊருக்குத் திரும்பும் போது முதுகுன்றக் கடவுளைத் தொழுது செல்கின்றார்கள். அவர்கள் தொழு வதைக் கண்டு அருகேயிருந்த முல்லைக்கொடி புன்னகை செய்ததாம்.

"கொல்லை வேடர் கூடி நின்று கும்பிட
முல்லை அயலே முறுவல் செய்யும் முதுகுன்றே."
(சம்பந்தர் தேவாரம்)

இந்தக் காலத்திலும் ஒரு சில வணிகர்கள் பகல் முழுதும் மக்களை ஏமாற்றி வாணிகம் செய்து மாலையில் முருகனுக்குத் திருவிழாக் கொண்டாடும்போது நாமும் அவர்களைப் பார்த்துப் புன்னகை செய்வதுபோல, அந்த முல்லைக்கொடியும் மாலையில் தன் முல்லை மலரை அரும்பச்செய்தது, அந்த வேடர் தம் அறி யாமையை நினைத்து முறுவல் செய்வதாக உட் பொருள் ஒன்றினையும் இந்த ஆசிரியர் அமைத்துப் பாடியிக்கிறார்.

சங்ககாலக் கருத்துக்களையும் தேவாரத் திருமுறை யில் நாம் கண்டு மகிழலாம். எடுத்துக்காட்டாக இரண் டொன்றை மட்டும் இங்கே குறிப்பிடுகிறேன்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்குறள் கருத்துக் களைப் பல இடங்களில் எடுத்தாளுகின்றார்.

அவை வருமாறு.

"பொறிவாயில் இவ்வைந்தினையும் அவிய"
"பிறவிப் பெருங்கடல் நீந்தி ஏறி"
"அகரம் முதலின் எழுத்தாகி"
"உறங்கி விழித்தால் ஒக்கும் பிறவி"

நாலடியாரின் சொற்றொடர்கள் :

" மை மறித்தியற்றி யன்ன பாங்கிலா வாழ்க்கை. (அப்.)

" நல்வாயில் செய்தார் நடந்தார் உடுத்தார்." (சுந்.)

" பல்வீழ்ந்து நாத்தளர்ந்து "
பகடூர் பசி நலிய" (சம்.)

இறவாப் புகழ்படைத்து ஒளிரும் சுப்பிரமணிய பாரதியார் " அச்சமில்லை அச்சமில்லை" என்னும் பாடலைப் பாடி நம்நாட்டு மக்களின் அச்சத்தை ஒழித்து நமக்குக் குடியாட்சியை வாங்கிதந்ததற்குத் துணை புரிந்தவர் திருநாவுக்கரசரே ஆவர். அவர் தம் திருவதிகை வீரட்டத் தேவாரத்திலே வரும் "அஞ்சுவது யாதொன்றும் இல்லை, அஞ்ச வருவதும் இல்லை" என்ற ஈற்றடிகளை அமைத்துப் பாடியிருத்தலைத் தமிழ் இளைஞர்களுக்கு நான் நினைவூட்டுகின்றேன்.

தேவாரத்தில் ஆங்காங்கே காணப்படும் நயங்கள் எல்லாம் சேக்கிழார் தம் திருத்தொண்டர் புராணத்திலே விளக்கிக் கூறியிருத்தலைத் தமிழன்பர்கள் ஒரு முறையேனும் படித்துப் பார்க்கும்படி கேட்டுக்கொள்கிறேன். அன்றியும் இறுதியாக மேலும் இரண்டொன்று கூறி என் கட்டுரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

ஃ என்னும் ஆய்த எழுத்தின் அருமை பெருமைகளை உணர்ந்து கொள்ளுதற்குச் சம்பந்தர் பாடியுள்ள "யாழ்மூரி" என்னும் மேகராகக் குறிஞ்சிப் பாடலாகிய "மாதர் மடப்பிடியும்" என்னும் துவக்கத்தையுடைய பாடல் பெரிதும் ஆராய்ச்சிக்கு உரியது.

அச்சிறுபாக்கப் பாடலை நான் படிக்கும் போது "இரண்டுருவாய அடிகள்" என்னும் அடிக்கு என்ன

பொருள் இருக்கும் என்று எண்ணி எண்ணிப் பார்த்தும் அறிய முடியாதிருந்தேன். அந்த ஊருக்குச் சென்றபோது இரண்டு சிவலிங்கம் ஒன்றாக இருத்தலைக் கண்டு "இங்கே இரண்டு இலிங்கங்கள் ஏன் இருக்கின்றன. என்று கோயில் குருக்களை வினவினேன். அவர் உடனே "இரண்டுருவாய அடிகள்" என்னும் அடியினைப் பாடிக் காட்டினர். சேக்கிழாரைப் போலத் தேவார ஆசிரியர்கள் சிறந்த ஆராய்ச்சியாளர்கள் என்பதை இதிலிருந்து நாம் தெரிந்துகொள்ளலாம். அன்றியும் ஞானசம்பந்தர் "வாழ்க அத்தணர்" என்னும் அடியினையுடைய பதிகத்தில் ஏழாம் பாடலில் சண்டேசுரர் சரிதையைக் குறிப்பிடும்போது "படிசேர்ந்த பால்கொண்டங்கு ஆட்டிடத் தாதை பண்டு,முடிசேர்ந்த காலை அறவெட்டிட முக்கண் மூர்த்தி, அடிசேர்ந்த வண்ணம் அறிவார் சொலக்கேட்டும் அன்றே" என்று பாடியிருத்தலால் சம்பந்தர், அப்பர் முதலியவர்கள் திருப்பதிகள் தோறும் சென்றபோது அங்காங்கே உள்ள அரிய செய்திகளைக் கேட்டறிந்தும் தம் திருப்பாடல்களில் அமைந்திருக்கின்றனர் என்பது தெரிய வருகிறது.

இத்தகைய உயரிய தமிழ்மறையில் இன்னும் எவ்வளவோ அரிய செய்திகள் அடங்கியிருக்கின்றன. அவைகளை எல்லாம் இளைஞர்கள் ஊன்றிக் கற்றும் ஆய்ந்துபார்த்தும் அகமகிழ்வார்களாக.

—:—

(15)

# புலவர் வாழ்க்கை

வாழ்வாங்கு வாழுதற்கு அறநூல்களில் வகுத்துள்ள வண்ணம் ஒழுக முயல்வதோடு நம் முன்னோர் தம் வாழ்க்கை நெறிகளை அறிந்து அவற்றுக்கு ஏற்ற வண்ணம் ஒழுக முயல்வதே சாலச் சிறப்புடைத்து. நம் முன்னோர்களுள் சங்க காலப் புலவர்கள் வாழ்ந்து காட்டியுள்ள ஒழுக்க நெறியே நாம் அனைவரும் பின்பற்றி ஒழுக வல்ல சிறப்புடைத்தாய வாழ்க்கை நெறியாக அமைந்துள்ளது.

சங்க காலப் புலவர்கள் தம் இளம் பருவ வாழ்க்கை வரலாறுகளையோ, அவர்கள் கல்வி கற்ற முறையினையோ அவர்கள் பேரும் புகழும் பெற்றுச் சிறந்த வழி வகைகளையோ, அவர் தம் அன்றாட வாழ்க்கை நெறிகளையோ நம்மால் தெளிவாகத் தெரிந்துகொள்ள இயலவில்லை. எனினும் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை போன்ற சங்க நூல்களின் துணை கொண்டு ஒருவாறு அப்புலவர்கள் தம் சிறப்பியல்புகளை நாம் அறிந்து கொண்டு நமக்கு ஏற்ற வகையில் நாம் வாழ முயலுதல் கூடும்.

சங்க காலப் புலவர்கள் பழியஞ்சிப் பகுத்துண்டு வாழ்தல், தமக்கென வாழாது பொதுநலம் போற்றி

வாழ்தல், அழுக்காறின்மையை ஒழுக்காருகக் கொள்ளுதல், தவறு கண்டவிடத்துச் சிறிதும் அஞ்சாது எடுத்துரைத்தல், இளிவரின் வாழாத உள்ளமுடையோராய் இருத்தல் முதலிய பலப்பல உயரிய பண்புகளையெல்லாம் பெற்றிருந்தமையை அவர்தம் செய்யுட்களிலிருந்தே நாம் அறிந்து கொள்ளுதல் கூடும்.

ஆற்றுப்படை என்னும் இலக்கணம் அமைந்த நூல்களை அக்காலப் புலவர்கள் இயற்றி யிருத்தலைக் கொண்டு பொருள் பெற்ருர் ஒருவர், பொருள் பெருது வருந்தும் பிறிதொரு புலவருக்கும் பொருள் பெறும் வழி கூறும் உள்ளம் வாய்ந்தவர் அக்காலப் புலவர்கள் என்பது நன்கு புலனுகிறது.

"உண்டால் அம்ம! இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனில்
உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"

இச் செய்யுளை இயற்றியவர் இளம்பெரு வழுதி என்னும் ஒரு மன்னராக இருப்பினும், அவர் பெரும் புலவர் வரிசையில் சேர்க்கப்பட்டு இருத்தலாலும் இச் செய்யுளில் பொதிந்துள்ள பொருள்கள் அக்காலப் பெருமக்கட்கு ஏற்ற குணங்களாக அமைந்திருத்தலை அவரே கூறுதலாலும், அக்காலத்து இத்தகைய பெருமக்கள் இருந்தனர் என்பது தெரிய வருகிறது.

இந்திரர்க்கு உரிய அமிழ்தம் கிடைப்பதாயினும் அக்காலப் பெருமக்கள் தனித்து உண்ணமாட்டார் என்பதும், எவரோடும் வெறுப்பு என்பது சிறிதும் இல்லாதவர் என்பதும், பிறர் அஞ்சத் தகும் துன்பத் துக்குத் தாமும் அஞ்சி, அது தீர்த்தற் பொருட்டு முய லாது இருத்தலும் இலர் என்பதும், புகழுக்காகத் தம் உயிரையும் கொடுக்க முன் வருவர் என்பதும், பழி வரும் எனில் உலக முழுவதும் பெறினும் கொள்ளார் என்பதும், எக்காலத்தும் உள்ளம் தவருதவர்கள் என் பதும், தமக்கென வாழாது பிறர் பொருட்டே வாழும் இயல்புடையவர்கள் என்பதும் இச்செய்யுளால் நன்கு புலப்படுவதால் சங்ககாலப் பெருமக்கள் எவ்வாறு தம் வாழ்க்கையை நடத்தி வந்தனர் என்பது தெளிவாகும்.

சங்க காலப் புலவர்களுள் பெரும்பாலோர் எளிய வாழ்க்கையையே நடத்தி வந்திருக்கின்றனர். அவர் கள் தங்கள் வாழ்க்கையைப் பொது நலத்துக்காகவே பயன்படுத்தி வந்தனர் என்பதையும், பலப் பல ஊர் களுக்கும் சென்று அங்குள்ள மக்களுக்குக் கல்வியின் சிறப்பினையும் அறநெறி வாழ்க்கையின் முறையினையும் அவர்கள் உள்ளம் உவக்குமாறு எடுத்துக் கூறி வந்த னர் என்பதையும்

> ''உவப்பத் தலைக் கூடி உள்ளப் பிரிதல்
> அனைத்தே புலவர் தொழில்''.

> ''யாதானு நாடாமால் ஊராமால் என்னொருவன்
> சாந்துணையுங் கல்லாத வாறு.''

என்னும் இவ்விரண்டு அரிய குறட்பாக்களைக் கொண்டே நன்கு அறிந்து கொள்ளலாம். அன்றியும்

அவர்கள் இன்பிலும் துன்பிலும் ஒரே தன்மையினராய் வாழ்ந்து வந்திருக்கின்றனர் என்பதற்குக் கணியன் பூங்குன்றனர்

யாதுமூரே யாவருங் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன் று மிலமே......

என்று பாடியுள்ள அடிகளே நமக்குப் போதிய சான்று பகரும்.

அக்காலத்திலிருந்த அரசர்களும் அந்தப் புலவர்களை மிகவும் சிறப்பாகவே நடத்தி வந்திருக்கிறார்கள். புலவர்கள் வந்தால் அவர்களைத் தமக்குச் சமமாகக் கருதி எதிர் கொண்டழைத்து அருமையோடு உபசரித்திருக்கின்றனர். பிட்டங் கொற்றன் என்னும் சிற்றரசன் தன்னைக் காண வந்த கதப்பிள்ளை சாத்தனர் என்னும் புலவருக்குப் பெரிய தலை வாழையிலையையிட்டுப் பல வகைப்பட்ட இனிய உணவுகளை எல்லாம் அன்போடு பரிமாறித் தானும் அந்த இலையிலேயே உடனிருந்து உண்டதாகத் தெரிவிக்கும் புறப்பாட்டு அந்தப் புலவரிடத்திலே அவர் எவ்வளவு பேரன்பு காட்டினர் என்பதை நமக்கு நன்கு உணர்த்துகின்றது.

சிறிய கட் பெறினே எமக்கீயு மன்னே
பெரிய கட் பெறினே
யாம் பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறு சோற்ருனு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ் சோற்ருனு நனிபல கலத்தன் மன்னே
என் பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயுமன்னே

அம்பொடு வேல்நுழை வழியெல்லாம் தானிற்கு
மன்னே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப் பாடு நரு மில்லைப் பாடுநர்க் கொன்று
ஈகு நரு மில்லை ....

என ஔவையார் அதியமான் நெடுமானஞ்சி இறந்த போது மனம் வருந்திப் பாடிய பாட்டைக் கொண்டும் அரசர்கள் அக்காலப் புலவர்களிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தார்கள் என்பதை நாம் அறிந்து கொள்ளலாம். அரசர்கள் நாட்டை எவ்விதம் ஆளவேண்டும் என்பதையும் குடிமக்களிடம் அவர்கள் எவ்விதம் நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் அந்தப் புலவர்கள் அந்த அரசர்களுக்கு வலியுறுத்திக் கூறச் சிறிதும் தவறியதே இல்லை.

விளைந்த நெல்லை அறுத்துச் சிக்கனமாகப் பயன் படுத்தினால் நெல் விளைந்த அந்த வயல் மிகச் சிறியதாக இருந்தாலும் அந்த நெற்கதிர்கள் பல நாட்களுக்கு உதவும். நூற்றுக் கணக்கான அளவையுடைய பெரிய நிலமாக இருந்தாலும் ஒரு யானையானது தனிமையாகப் புகுந்து உண்ணப் புகுமானால் அது உண்ட நெல்லினைவிடப் பாழடைந்த நெற்கதிர்களே அதிகமாக இருக்கும். இதை எடுத்துக்காட்டாகக் கொண்டு ஓர் அரசன் தன்னிடமுள்ள குடிமக்களையும் நன்கு கவனித்து வாழ்தல் வேண்டும். அவ்வாறில்லாமல் குடிமக்களின் நலனைச் சிறிதும் கருதாது அவர்களை வருத்தித் தன் நலனையே விரும்புவானேயானால் யானை புகுந்த நெல் வயல் போன்று அந்த நாடு கெடும். குடிமக்களின் நிலையறிந்து அவர்கள் தகுதிக்குத் தக்க

வாறு அவர்களிடம் பொருள் பெற்று வாழ்வானே யானால் அந்த நாடு பெரிதும் செழித்து அந்த அரச னுக்கும் கோடிக்கணக்கான பொருளைத் தரும் என் பதைப் பிசிராந்தையார் பாண்டியன் அறிவுடை நம்பிக்கு எடுத்துக் கூறியிருக்கின்றார்.

மோசிகீரனார் என்பவர், 'மக்கள் வாழ்க்கை நெல் விளைவினாலேயோ நீர் நிலைகளின் சிறப்பினாலேயோ நன்னிலையை அடைந்து விடாது; அரசனின் ஆட்சித் திறமையினாலேதான் மக்கள் இன்புற்று வாழ்வர்' என் பதை அரசர் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும் என்பதை,

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால் யானுயிரென்ப தறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே"

என்னும் அரிய செய்யுளினால் அரசர்க்கு உணர்த்தி யிருக்கின்றார்.

குடபுலவியனார் என்னும் புலவர் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பார்த்து "அரசே, உண்டி கொடுத் தோர் உயிர் கொடுத்தவரே யாவர். உணவே மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாதது. அந்த உணவு உற்பத்திக்கு நில வளமும் நீர் வளமுமே இன்றியமை யாதவை. ஆதலால் நீ போர் செய்து அகன்ற நிலத் தைப் பெறுவதைவிட உன்னிடமுள்ள கரம்பு நிலங் களை யெல்லாம் வளமுடையனவாக ஆக்க வாய்ப்பு உள்ள இடங்களிலெல்லாம் நீர் நிலைகளை ஏற்படுத்தி அந்த நிலங்களை எல்லாம் வளமான நிலங்களாகச்

செய்வாயாக. அவ்விதம் செய்வாயானல் மக்கள் இன்புற்று வாழ்வர். நீயும் இன்புற்று வாழ்வை, என்று அறிவுறுத்தியிருக்கின்ருர். இத்தகைய பாடல்கள் நம் சங்க நூல்களில் பல இடங்களில் காணப்படுகின்றன.

இக்கால ஆட்சியாளர்கள் அறிந்து ஒழுகுதற்குக் குறள் நெறி ஒன்றே அமையும் எனினும் இத்தகைய செய்யுட்களும் பெரிதும் பயன்படும்.

அக்காலப் புலவர்கள் அரசரளிக்கும் பரிசுகளைக் கொண்டே பெரிதும் தம் வாழ்க்கையை நடத்த வேண்டியவர்களாக இருந்தார்கள் என்ருலும் அவர்கள் எத்தகைய துன்ப நிலையிலும் தம்முடைய தகுதியைக் குறைத்துக் கொண்டதில்லை. எவ்வளவு சிறந்த அரசனுக இருப்பினும் அவன் அவர்கள் தகுதியறிந்து பாராட்டினுல்தான் அதனை அவர்கள் ஏற்றுக் கொள்வர். "முற்றிய திருவின் மூவராயினும் பெட்பின்றீதல் யாம் வேண்டலமே" எனச் சற்றுக் காலந் தாழ்த்துப் பரிசளித்த கடிய நெடு வேட்டுவன் என்னும் அரசனை நோக்கிப் பெருந்தலைச் சாத்தனுர் கூறியது காண்க.

இளவெளிமான் என்னும் அரசன் பெருஞ்சித்திரனுர் என்னும் புலவரைத் தக்க முறைப்படி பாராட்டாத போது அவர் பெருமிதத்துடன் கூறிய

எழுஇனி நெஞ்சம் செல்கம் யாரோ
பருகுவன் அன்ன வேட்கை யில்வழி
அருகிற் கண்டும் அறியார் போல
அகம்நக வாரா முகனழி பரிசில்
தாளி லாளர் வேளா ரல்லர்.

வருகென வேண்டும் வரிசை யோர்க்கே
பெரிதே யுலகம் பேணு நர் பலரே......

என்னும் செய்யுளும் இதனை வலியுறுத்தும்.

இங்ஙனம் பெருமிதத்தோடு வாழ்ந்து, அரசருக்கும் பொது மக்களுக்கும் அறவுரை கூறிப் பிற்காலமக்களுக்கும் என்றும் நின்று பயன் தரத்தக்க வகையிலே அரிய செய்யுட்களையும் இயற்றிப் பேரும் புகழும் பெற்றுத் திகழ்ந்தனர் நம் சங்க காலப் புலவர்கள். அவர்கட்குப் பின்னர் வந்த சேக்கிழார் பெருமான், கம்பர் பெருமான் முதலிய புலவர்களும் தம்முடைய தகுதியைக் குறைத்துக் கொள்ளாத வகையிலேயே வாழ்ந்து காட்டியிருக்கின்றனர். அவர்கட்குப் பின்னர்த் தோன்றிய புலவர்களுள் சிலர் பொருளுக்காக எத்தனையோ வகைகளில் தம் தகுதியைக் குறைத்துக் கொண்டனர். "பத்து ரூபாயனை நேர் பாப்பைய வேளே! யுனக்குப் பத்துரூபா யென்ன பஞ்சமோ" என்று இடைக் காலப் புலவராய காழி அருணசலக் கவிராயர் என்பவர் பத்து ரூபாவுக்கும் ஒரு பாட்டுப் பாடினர். அவர் அதோடு நில்லாமல் மற்றொரு செல்வரிடம் சென்ற போது,

கால் வீழ்ந்து நம்மைக் கவிபாடச் சொன்னானே
மேல் வீழ்ந்து நாமே விளம்பினோம்— நூலறிந்து
தந்தக்கால் தந்தான் தராக்கால் நமதுமனம்
நொந்தக்கால் என்னாகு மோ

என்று வருந்திக் கூறிய செய்யுள் இன்றும் நம்முள்ளத்தை உருக்குகின்றது.

"அட கெடுவாய் பல தொழிலு மிருக்கக் கல்வி
அதிகமென்றே கற்று விட்டோம் அறிவில்லாமல்"

என்று தம் நிலையினை நினைத்து வருந்தினர் படிக்காசுத் தம்பிரான் என்னும் பெரும்புலவர்.

..............ஐயோ எங்கும்

பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான் புவியிற்றான்
பண்ணினனே"

என்னும் ஈற்றடியினையுடைய இராமச்சந்திர கவிராயருடைய இரக்கப் பாடலை யறியாதார் யாவர்?

சிறிது காலத்துக்கு முன்பு இருந்த மகாவித்துவான் சண்முகம் பிள்ளைக்கு ஒரு பொட்டணம் ஓமப் பொடி வாங்கிக் கொடுத்து விட்டுப் பாடம் கேட்டதாகக் காவேரிப்பாக்கம் நமச்சிவாய முதலியார் என்னிடம் கூறியிருக்கின்றார். அண்மையில் மறைந்த பேராசிரியர் கா. ரா. கோவிந்தராச முதலியார் முதன் முதலில் ஏழு ரூபாக்கள் ஊதியம் பெற்றே ஓர் உயர்நிலைப் பள்ளியில் தமிழ்ப் புலவராகப் பணியாற்றினர். என் காலப் புலவர்களும் இருபது இருபத்தைந்து என்று ஊதியம் பெற்று முடிவில் நாற்பது ரூபாக்கள் பெறும் நிலையில் வாழ்ந்தே ஓய்வு பெற்றனர். எனினும் அவர்கள் கூடிய வரையில் தம் தகுதியைக் குறைத்துக் கொள்ளாமலேயே வாழ்ந்து வருவதற்காக நூல்கள் எழுதியும் சொற்பொழிவாற்றியும் இரவும் பகலும் பாடம் சொல்லியும் பொருள் தொகுக்க வேண்டியவர்களாக இருந்தனர். இந்த மக்களாட்சிக் காலத்திலேனும் தமிழ்ப் புலவர்களும் தமிழ் மொழியும் சிறந்த நிலை

யில் விளங்குதல் வேண்டும். இக்காலப் பொருள் நிலையை நோக்க அக்கால இருபது ரூபா ஊதியமே உயர்ந்ததாகத் தோன்றுகின்றது. தமிழ் கற்றோர் நிலை உயர வேண்டுமானால் இக்கால நிலைமைக்கு ஏற்றபடி அவர்கள் விஞ்ஞானம் வரலாறு பொருளியல் முதலிய பல துறைகளிலும் வல்லுநராய் இருத்தல் வேண்டும். அவ்விதம் தமிழ்ப்புலவர்கள் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்வதற்கு வேண்டிய வழி வகைகளை நம் நாட்டு அரசாங்கம் பெரிதும் கவலை கொண்டு வகுத்தல் வேண்டும். அந்த நிலை வருமானால் இக்காலப் புலவர்களும் சங்க காலப் புலவர்கள் போன்று பெருமிதத்தோடு வாழ்ந்து பொதுமக்களுக்கும் இக்கால நிலைக்கு ஏற்ற வகையில் பல நன்மைகளைச் செய்தல் கூடும்.

Jyothi Printers, Madras 1